

# ஸப்தகிரி

கஸ்ட், 1990

விலை ரூ. 1/-

JAGADISH

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



பார் உருவிநீர் ஏரிகால் விசும்புமாகிப் பல்வேறு சமயமுமாய்ப் பரந்துநின்ற
ஏர் உருவில் மூவருமே எனநின்ற இமையவர்தம் திருஉருவேறு
எண்ணும் போது
ஓர் உருவம் பொன்உரு ஒன்று செந்தீ ஒன்று மாகடல உருவம் ஒத்துநின்ற
மூவுருவும் கண்டபோது ஒன்றாம்சோதி முகிலஉருவம் எம்அடிகள் உருவந்தானே

*திருநெடுந்தாண்டகம் - 2*

*அழகிய ஜகத்திலே மூன்று தெய்வங்களே முக்கியம் என்று சொல்ல லாமபடி அமைந்த தேவதைகளினுடைய ரூபங்களைத் தனித் தனியாகப் பிரித்து ஆராயுமிடத்தில் பிரமனாகிய ஒரு மூர்த்தியானது பொன்னின் வடிவாக உள்ளது. பரமசிவனாகிய ஒரு மூர்த்தியானது சிவந்த நெருப் பின் நிறமாக உள்ளது. ஸ்ரீமந் நாராயணனாகிய ஒரு மூர்த்தியானது கருஙகடல் நிறமாக உள்ளது. சேர்ந்திருக்கின்ற இம்மூன்று மூர்த்திகளை யும் பரிசீலனை செய்யும் போது, கடினமான பூமி உள்ளிட்டு நீர், நெருப்பு காற்று, ஆகாசம் ஆகிய ஐம்பூதங்களையும படைத்தும், பல்வேறு சமயங் களைக் கொண்ட உலகத்தைப் படைத்தும், அங்கே அந்தர்யாமியாய் வியா பித்து நிற்குமதாய், பரஞ்சோதி என்று புகழப்படுவதாய், ஒப்பு கூறமுடி யாததாய் இருக்கின்ற காளமேக உருவமானது மகாவிஷ்ணுவின் முழு வடிவமாகும்.*



# ஸப்தகிரி


ஆகஸ்ட் - 1990

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 3


## உள்ளுறை



---

### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : கிருஷ்ண ஜெயந்தி
சித்திரம - கே. ஜெகதீஷ

முதல் உள்அட்டை : காயத்ரி தேவி
சித்திரம் - ஆர். பி. பாபுநாத்

2-வது உள்அடடை : நாட்டிய விநாயகா
பின்னடடை : வரலட்சுமி விரதம
சித்திரம் : கே. ஜெகதீஷ்


சிறபபாசிரியர்
திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருபபதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸதான அசசகம்,
திருப்பதி.

ஆசிரியா
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . .

கலியுகத்தில் நடைபெற்றுவரும் அரசியல், சமூக, விஞ்ஞான, பொருளாதார சீர்கேடுகள் அங்கிங்கெனாதபடி உலகமெங்கும் நீக்கமற நடைபெற்றுவருவது யுகத்தின் இலக்கணமாகத் திகழ்கிறைது. இக்கலியுகத்தின் ஒரு முன்னோடியாகத்தான் - ஓர் அபாய அறிவிப்பாகத்தான் துவாபரயுகத்தின இறுதிக்கட்ட சமுதாய நிகழ்ச்சிகள விளங்குகின்றன என்றே சொல்லலாம் "தர்மம் குலைய, அதர்மம் தலைவிரித்தாடிடும்போதெல்லாம் நான் இம்மண்ணில் தோன்றிடுவேன்" என்று கண்ணனே தன் வாய் திறந்து எச்சரிததிடும் அளவு தரம் தாழ்ந்த நிகழ்ச்சிகளை துவாபரயுக இறுதிக்கட்டம் கொண்டு விளங்கியது. தன்னுடைய முந்தைய அவதாரங்களின்போது தன் அவதார நோக்கத்தினை எங்கும் குறிப்பிடவில்லை. மேலும் ஒவ்வொரு அவதார காலத்தின்போது எதிரி அதாவது அதர்மத்தின் தலைவன் ஒருவனாகத்தான் இருந்தான். அத்தகைய அவனுக்கும் காலக்கெடு கொடுத்து, அவனைத் திருததவே மனங்கொண்டு, இறுதியில் அவன் திருந்தாதபோது, நேரிடையாகவே தீயோனை எதிர்கொண்டு அழிதது தர்மத்தை நிலைநாட்டினான அப்பரந்தாமன். இதுபோது தோன்றி மறையும அவதாரமாக அதாவது அமசாவதாரமாக வந்துதித்த பரமன் திரேதாயுகத்திலும், துவாபரயுகத்திலும் மனிதற்போன்று பிறப்பு வளர்ப்பினை தானும் கொண்டு, தர்மத்தைக் காப்பாற்ற பூர்ணாவதாரமாகத் திகழந்தான். அந்த திரேதாயுகத்திலும் இராவணன எனும் ஒருவனே அதர்மத்தின் தலைவனாக விளங்கினான். அவனை அழிப்பதே தனது நோக்கமாகக் கொண்டான் இராமன். ஆனால் துவாபரயுகத்தில் அப்பரமனே நேரிடையாக மட்டுமன்றி பல்லோர் உதவியுடன் பகைவன் ஒருவனை மட்டுமல்ல, அதர்மத்தின் பல தலைவர்களை மறைமுகமாகவும் அழித்திடும் விந்தையினை நாம் காணலாம்.

மகாபாரதம் ஜயம் அதாவது வெற்றி என்றே ஆன்றோர்களால் ஒரு காலத்தில் அழைக்கப்பட்டுவந்ததிலிருந்து, அக்காவியம் தர்மத்தின் வெற்றியினைக் கூறுகின்றது என்றே அறிந்து இன்புறலாம். தர்மத்தின வெற்றியினையும் தீய சக்திகளின் அழிவையும் பலகோணங்களில் இவ்வவதாரத்தின்போதுதான் நாம் காண முடிகின்றது. பாரதத்தின் உள்ளமாக அச்சுதன் விளங்க, உடலாக தருமன் திகழ, உயிர்ந்துடிப்பாக அர்ச்சுனன அமைய, இன்றைக்கும் பொருந்தும் வகையில், அரசியல், அறிவியல், சமுதாய மற்றும் வாழ்க்கைக் கூறுகளைக் கதை மாந்தர்கள் மற்றும் காட்சிகள் மூலம் விளக்கிப் புரட்சிப் புதுமைப் படைப்பாக இக்காவியம விளங்குகிறது.

ஆசைகள எனும் சிறையிலிருந்து, அறியாமை எனும் இருட்டிலிருந்து மனிதன் தன்னை விடுவித்துக்கொள்ள வேண்டும் என்றே கண்ணன் சிறையில், இருட்டில் தன் பிறப்பை ஏற்படுத்திக்கொண்டான. மேலும் அரச குடும்பத்தைச் சார்ந்த கண்ணன், தன்னை இடையர்குலத்தவனாக்கிக் கொண்டு 'ஏக வர்ணம இதம் பூர்ணம்' என்பதை அறிவுறுத்தினான். தர்மம் நிலைபெற வாழ்ந்து காட்டினான் இராமன்; இவ்வவதாரத்தில் கண்ணன தர்மம் வாழ வழிகாட்டினான். மற்ற அவதாரங்களில் கையில் கருவி ஏந்தி அதர்மத்தை அழித்த இறைவன, இங்கு தன் மதியால் பிறரைக் கொண்டு தர்மத்தைக் காத்த நிகழ்ச்சிகள் எண்ணி இன்புறத்தககன.

கோகுலத்தில் திருடியும், அழுதும், குறும்புகள் செய்தும் தன் சௌலப்ய, சௌசீல்ய குணங்களாலும பக்தர்களின் மனதில் இடம் பிடித்து, பிரமே பக்தியின் சிறப்பினை அன்பின் வலிமையை உலகுககு எடுத்துக்காட்டி, அன்பு ஒன்றே மனிதனின மனயமைதிக்கு வழி வகுக்கும் என்று கோடிட்டுக் காட்டினான். அன்பின் ஊற்றாக அழகின் இருப்பிடமாக வழிபட்டு, "ஸாக்ஷாத் மந்மத: மந்மத:" என்றும் "மதுரம் மதுரம் மதுரம்" எனறும் பலவாறு பக்தர்கள் கண்ணனின் வடிவழகில் ஈடுபட்டுத் திளைக்கிறார்கள். உபநிஷத்துகளில் பிரம்மமாகவும், புராணங்களில ஈஸ்வரனாகவும், இதிஹாஸங்களில் அவதாரங்களாகவும், ஆழ்வார் மறறும் அடியார்களின் வாழக்கையில் அர்ச்சையாகவும் விளஙகி இந்துசமயப் பிரிவுகளிடையே ஒரு பொதுத் தன்மை அமையுமபடி தன்னை விளங்கச் செய்து, மேலை நாட்டாரையும் கவர்ந்திழுத்திடும் பெருமையுடன் திகழ்கின்றான் அக்கோகுல நாயகன்.

தூதுவனாகவும், தேரோட்டியாகவும் திகழ்ந்து தன எளிவந்த தன்மையைககாட்டி, தவமும், பொறுமையும், பணிவும், தியாகமும் மனிதனை மாண்புறச் செய்யும் அறப்பண்புகள் என்பதை மகாபாரதக் காட்சிகள் மூலம் தன கிருஷ்ணாவதாரத்தில் அம்மாமாயன் விளக்கினான். பாரதப்போரின முதல் நாளன்று வாழ்க்கைத் தத்துவத்தை, தர்ம, பக்தி, ஞான வழிகளில் குந்தி மைந்தனுக்கு தேவகி மைந்தன கீதை வழியாக உபதேசித்தான, போரின் இறுதிநாளன்று "உடலை என்று மனம் ஆளுகினறதோ, வாழ்க்கையில எனறு தியாகம முதன்மை பெறுகினறதோ, பொன்னும, பொருளும, வாழ்க்கையின இலக்காக அமையாமல் எனறு கருவியாகமட்டுமே அமைகின்றதோ அன்றே மனிதன வாழ்க்கையில் வெற்றியை அடைகின்றான்" எனறு அறிவுறுத்தி பகவானின திருநாம தியானமே மனயமைதியினையும, மன உறுதியினையும வழங்கும் எனற வகையில பகவானின் திருநாமப பெருமையினை பீஷமர் தருமனுக்கு உபதேசித்தருளினார். களத்தில் நிகழ்ந்த இக்கீதோபதேசமும தருமோபதேசமும் கலியில மக்கள நடைமுறையில் பின்பறறத்தக்கன.

மகாபாரதப்போர் இரு வீட்டாரின் சொந்தப் பிரச்சனைகளால் வந்த விளைவு அல்ல அறத்திற்கும் அநீதிக்கும் இடையே நடநத தருமப் போராட்டமேயாகும். தர்மத்தை மீறிய பாசம் கொண்ட திருதராட்டிரனும், பொறாமை கொண்டு அலைந்த துரியோதனனும், அடக்கம் தவறிய திரௌபதியும், பெண்மைக்கு உயர்வுதராத, சூதாடலின் தீமையை தடுக்க முடியாத ஆன்றோருமே போருக்கு வித்திட்டனர். இவ் அநீதிப் போரில தருமதேவன் யுதிஷ்டிரனும், கற்பின் கனலி காந்தாரியும், கொடைவள்ளல் கர்ணனும், கருணையின் பிறப்பிடம் கண்ணனும களத்தில் எதிரிகளாக நிற்க வேண்டிய நிலைமை தோன்றியது. இவ் அறப்போராட்டததின் தீவிரததை, உச்சக்கட்டத்தைத்தான் இன்றைய கலியுகம் கண்டு வருகிறது. இந்நிலையில் பகைவனைத் திருததி பக்தனைக் காப்பாற்றுவதே இறைவனின் இலட்சியம். கோபியரை அவர்களுடைய காமத்தாலும், கம்சனை அவனுடைய பயத்தாலும், சிசுபாலனை அவனுடைய வெறுப்பாலும், துரியோதனனை அவனுடைய பொறாமையாலும், தருமனை அவனுடைய நற்சிந்தனையாலும், பீஷ்மரை அவருடைய பொறுமையாலும, அர்ச்சுனனை அவனுடைய பக்தியினாலும் ஆட்கொண்ட வேய்ங்குழல் நாயகன் இக்கலியுக மனிதர்களாகிய நம்மை அவனுடைய திருநாமப் பெருமையாலும், அவன் தம் அர்ச்சாவதார அழகாலும் ஆட்கொள்ள, அவனது திருவடிகளையே தஞ்சமெனப் புகுவோம்,

# செய்திச் சுருக்கம்

திருப்பதியில் உள்ள அரசு ருயா மருத்துவமனை வளாகத்தில் தி. தி. தேவஸ்தானத்தாரால் ரூ.8.25 இலட்சம் செலவில் கட்டப்பட்ட தர்ம சத்திரத்தினை ஆந்திர மாநில பஞ்சாயத்து ராஜ் துறை அமைச்சர் திரு. ஆர். செங்கா ரெட்டி அவர்கள் திறந்து வைத்தார்.

ஃ ஃ

தி. தி. தேவஸ்தான மேலாண்மை விரைவில் திருமலையில் கோயிலைச் சுற்றியுள்ள நான்கு மாடவீதிகளில் உத்ஸவ மூர்த்திகளின் திருவீதிவுலா நிகழ்ச்சிகள் மேற்கொள்வதற்கென ரூ. 81 இலட்சம் செலவில் தங்கத் தேர் ஒன்றினைச் செய்வதென்று முடிவு செய்துள்ளது. தற்போது பல்லக்கில் திருவீதிஉலா எழுந்தருளப்பட்டு வருகின்றது. மேலும் திருமலையிலும், திருச்சானூரிலும் தற்போது இரு வெள்ளித்தேர்கள் உள்ளன.

ஃ ஃ

ஸ்ரீ கோவிந்தராஜ கோவிலில் உத்ஸவ விக்ரகங்களுக்குத் தங்க முலாம் வேய மேலாண்மை முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநில கல்வித்துறையைச் சார்ந்த இணை இயக்குநர் நிலையில் பணியாற்றி வரும் திரு. எச். வி. ரமணா அவர்கள் தி.தி. தேவஸ்தான கல்விஅலுவலராக அண்மையில் பதவி பொறுப்பேற்றுள்ளார்.

ஃ ஃ ஃ

நாட்டின் பல்வேறு பகுதிகளில் தி. தி. தேவஸ்தானத்திற்குப் பல நிலங்கள், வீடுகள் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டு வருகின்றன. இவற்றில், மேலாண்மைக்கு வருவாய் ஈட்டுத்தராத நிலங்களை விற்றுவிடுவதென்று மேலாண்மை முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

கோயில் கலை சம்பந்தமான ரூ 2.5 கோடி செலவில் அரும்பொருட் காட்சியகம் ஒன்று திருமலையில் விரைவில் கட்டப்பட உள்ளது.

ஃ

திருமலைக் கோயிலில் கல்யாணோத்ஸவம நடத்த விரும்பும் கிருஹஸ்தர்கள் அதற்கான கட்டணமாக ரூ. 2000/- செலுத்துகிறார்கள். ஆனால் மேலாண்மைக்கு ஆகும் செலவு ரூ. 2200/-ஆகும். ஆகையால் இனிமேற்கொண்டு கல்யாணோத்ஸவம் நடத்தும் கிருஹஸ்தர்களுக்கு பிரஸாதமாக கொடுக்கப்படும் லட்டுகளின் எண்ணிக்கை பத்தாகக் குறைக்கப்படும்.

ஃ ஃ ஃ

1989-90ஆம் நிதி ஆண்டில் திருமலை கல்யாண கட்டாவில் யாத்திரிகர்களின்வேண்டுதல்மூலமாக கொடுக்கப்பட்டுச்சேர்த்து வைக்கப்பட்ட தலைமுடியினை விற்றதில் தி. தி. தேவஸ்தானத்திற்கு கிடைத்த வருவாய் ரூ. 1.2 கோடியாகும். இத்தொகை சென்ற ஆண்டினை விட ரூ. 22 இலட்சம் அதிகமாகும்.

செகந்திராபாத்தைச் சார்ந்த கர்னல் எஸ்.பி. நாயர் அவர்கள் தி. தி. தேவஸ்தான அன்னதானதிட்டத்திற்கென ரூ 10 இலட்சத்தினை அண்மையில் நன்கொடையாகஅளித்துள்ளார். இதுவரை இது போன்ற தொகையினை இத்திட்டத்திற்கு அளித்தவர் பத்தொன்பதாவர். ரூ. 5 இலட்சம் வழங்கியவர் பதின்மூன்று பேராவர்.

ஃ ஃ ஃ

திருமலையில் சுமார் 12,000 யாத்திரிகர்கள் அமரும்படியான புதிய 'க்யூ' கட்டடம் ஒன்று ரூ. 6 கோடி செலவில் கட்டப்பட உள்ளது.

திருப்பதியில் மேற்கொள்ளப்படவிருக்கும் பாதாள சாக்கடைத் திட்டத்திற்கென செலவாகும் ரூ. 8.6 கோடியில் திருப்பதி நகரமன்றம் தன் பங்காக ரூ. 2 கோடி வழங்க மீதித் தொகையினை தி. தி. தேவஸ்தானம் வழங்குவதென்று முடிவு ஒன்று மேற்கொள்ளப்பட்டுள்ளது.

ஃ ஃ

ஸ்ரீ அன்னமாசார்யார் பிறந்த இடமான கடப்பை மாவட்டம் தாள்ளப்பாக்கம் எனும் கிராமத்திலுள்ள ஸ்ரீ சக்கரத்தாழ்வார் மற்றும் ஸ்ரீ சென்னகேசவ சுவாமி கோயில்களை தி.தி. தேவஸ்தானம் தன் மேலாண்மையின் கீழ் ஏற்றுக் கொள்ளும்.

ஃ ஃ ஃ

திருப்பதியிலுள்ள அரசு ருயா மருத்துவமனையின் இதயச்சிகிச்சைப் பிரிவுக்கென நவீன கருவிகளை வாங்குவதெற்கென்று தி. தி. தேவஸ்தான மேலாண்மை ரூ. 47.02 இலட்சம் வழங்க உள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் தி. தி. தேவஸ்தானத்தாரின் "சுற்றுப்புறச் சூழ்நிலை கல்வி மையம்" ஒன்றினை அமைத்திட ரூ. 5.8 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் எஸ். வி. ஆயுர்வேத கல்லூரியின் மாணவ மாணவி விடுதிகளுக்கென ரூ. 36 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

(48-ஆம் பக்கம் பார்க்க)

தொடர் கட்டுரை :

# லிங்க பூஜை

"கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்" என்பது பழமொழி ஸ்ரீ வைணவ ஆசார்யர்களுள் ஸ்ரீமந் நாதமுனிகளின் காலமும், கம்பன் வாழ்ந்த காலமும் ஒன்றென்பர். இருவரும் சமகாலத்தவர்கள் என்பது தமிழறிஞர்களின் துணிபு. கம்பன் இராம காதையை இயற்றியானபின் திருவரங்கரங்கத்தில் அரங்கேற்ற முயன்றதாகவும் அப்போது திருவரங்கன அர்ச்சகர் மூலமாக "நம் சடகோபனை பாடினையோ?" என விளம்பியதாகவும், அதனால் கம்பன் திருவாய்மொழி எனப்படும் திவ்ய ப்ரபந்த பாசுரங்களை இயற்றிய சடகோபன் எனப்படும் "நம்மாழ்வாரை" துதித்து "சடகோப ரந்தாதி" இயற்றிய பின்னர் கம்பன் இராம காதையை திருவரங்கத்தில் ஸ்ரீ ரங்கநாச்சியார் முன்புறம் உள்ள மண்டபத்தில அரங்கேற்றியதாகவும் அப்போது அம்மண்டபத்தின் தென்புறம் உள்ள மேட்டழகிய சிங்கர் (நரசிம்மன்) சன்னிதியில் சிம்மத்தின் கர்ஜனை கேட்டதாகவும் (அதாவது நரசிம்ம மூர்த்தி கர்ஜனை செய்து கம்பராமாயணத்தை அங்கீகரித்ததாக) செவி வழிச் செய்தி உள்ளது.

கம்பநாடனின கவிதைப் பெருமையை இனிவரும் பாடலால் அறியலாம்!

இம்பர் நாட்டின் செல்வமெலாம்
எய்திய அரசாண்டிருந்தாலும்
உம்பர் நாட்டின் கற்பகக் கா வோங்கு
நிழல் இருந்தாலும்
செம்பொன் மேரு அனைய புயத்
திறல் சேர் இராமன் திருக்கதையில்
கம்ப நாடன் கவிதையிற் போல்
கற்றோர்க் கிதயம் களியாதே !

கம்ப ராமாயணத்தில் மொத்தம் 6 காண்டங்கள் அமைந்துள்ளன. வால்மீகி ராமாயணத்தில் காணப்படும் உத்தரகாண்டப் பகுதியை கம்பன பாடவில்லை. கம்பன் தன் காப்பியத்தை மங்களமாக முடிக்க வேண்டும் என எண்ணியதால் யுத்த காண்டத்தில் இராமன் அயோத்தி ஏகி திருமுடி சூடியபின் விடை கொடுத்த படலத்துடன் இராமகாதையை நிறைவுறுத்துகிறார். கம்பன் பாடிய கடவுள் வாழ்த்து பாவுடன் நம் கட்டுரையைத் தொடங்குவோம்!

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும நீங்கலா
அலகிலா விளையாட்டுடையாரவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே

(இவ் உலகங்கள் யாவற்றையும் உண்டாக்குபவரும், அவற்றினைக் காப்பாற்றுபவரும், இறுதியில் உலகத்தை அழிப்பவரும் ஆகிய இம்முத் தொழிலையும் செய்தலை முடிவில்லாத விளையாட்டாக எவர் ஒருவர் கொண்டுள்ளாரோ அவரே தலைவர்; அவருக்கே நாங்கள் அடைக்கலம்)

இனி கம்பனின் நோக்கில் இராமனின் குலதெய்வத்தைக் காண்போம்!

முதலில் பாலகாண்டத்தில் விச்வாமித்ர முனிவர் ஜானகியின் தந்தையான ஜனகரிடம் ஸ்ரீ ராமனுடைய குலப்பெருமையை எடுத்துரைக்கும் போது ஒரு செய்யுளில் இராமனின் குல முதல்வனான இக்ஷ்வாகுமன்னன் செய்த அருந்தவத்தைக் குறிப்பிடுகிறார். அருந்தவம் புரிந்து அவனிடமிருந்து படைப்புக் கடவுளான அயனின் அன்றாட வழிபடு கடவுளான திருவரங்கத் திருமாலை தான் வழிபடுவதற்கு வழங்குமாறு வரம் பெற்றமையை இச்செய்யுள் தெரிவிக்கிறது.

வால்மீகி ராமாயணத்தில் இராமனின் குலதெய்வம் திருவரங்கனே என்பதை அறிந்தோம். திருவரங்கன் குல தெய்வமான விதத்தை இச் செய்யுளில் அறிய முடிகிறது.

பிணி அரங்க வினையகலப் பெருங்
காலம் தவம் பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை
வழிபட்டுப்
பணி அரங்கப் பெரும் பாயற்
பரஞ்சுடரை யாம் காண
அணி அரங்கம் தந்தானை அறியாதார்

'அணியரங்கத்தில் அரவணையில் பள்ளி கொண்டுள்ளவன் பரஞ்சுடர்; அவன் அயனால் வழிபடப்பட்ட பரம் பொருள். அப்பரம் பொருளை இன்று நாம் எல்லோரும் கண்ணால் காணும்படியாய் பெரும் உபகாரம் செய்த இக்ஷ்வாகு மன்னனை அறியாதவர் அறியாதவரே!' என்கிறான் கம்பன்.

திரு. ஆர். வி. ஸ்ரீதர ராமாநுஜன்
மதுரை.

அடுத்தபடியாக அயோத்யா காண்டத்தில் இராமன் திருமுடி சூட்டுவதற்கு முன்பு குலகுருவாகிய வசிட்ட மாமுனிவர் ஸ்ரீராமனுக்கு அரசநெறிகளை உபதேசம் செய்து, திருமுடி சூடுவதற்கு முன்பு திருமாலின் கோயிலில் விரதம் இருக்க வேண்டும் என அறிவுறுத்துகிறார். அவருடைய

ஆணையின்படி தனது குல தெய்வமும் ஆதிசேட சயனத்தில் அறிதுயிலமர்ந்தவனுமான திருவரங்கனை வணங்கி வழிபட்டு பின்னர் அந்த திருமாலின் கோயிலிலே புற்படுகையில் (தர்பசயனத்தில்) பள்ளி கொண்டதை அயோத்யா காண்டம் 121 மற்றும் 122வது செய்யுட்கள் தெரிவிக்கின்றன.

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தில்,

"கதே புரோஹிதே ராமஸ ஸ்நாதோ
நியத மாநஸ:
ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா
நாராயண முபாகமத்"

என்கிற ச்லோகத்தை தமிழில் கூறுவது போல் அமைந்துள்ளது. மற்றொரு செய்யுளில்("விஷ்ணோராயதனம்)(ஆயததம்—கோயில். விஷ்ணோராயதனம் – விஷ்ணுவின் கோயில்) எனக் குறிப்பிட்டதை இங்கு, "ஆயிர மவுலியான தானம்" — திருமாலின் கோயில் எனக் குறிப்பிடுகிறார்.

இனி செய்யுளைக் காண்போம்!

ஏனை நீதி யினியன வையகப்
போனகற்கு விளம்பிப் புலங் கொளீஇ
ஆனவன்றொடு மாயிர மவுலியான்
தான நண்ணினன் றத்துவ
நண்ணினான்
(அயோ. கா. 121)

இவ்விடத்தில் மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களின பதவுரையைக் காண்போம்!

வையகப் போனகன் — உலகுண்ட திருமால், போனகம்—உணவு, புலங் கொளீஇ — அறிவைக் கொளுத்தி, ஆனவன்—அவன், "ஆனவனிங் குறை நாள் வாய்" (கந்தபுராணம் 441) "ஆயிரமவுலியான் தானம்" —திருமாலின் கோயில், தத்துவம்—மெய்யுணர்வு, நண்ணினன்—வசிட்ட முனி.

"ஆயிர மவுலியான்" மவுலி—கிரீடம்; ஆயிரம் மவுலியான் — ஆயிரம் கிரீடங்களைஅணிந்தவன் "ஸஹஸ்ர சீர்ஷா புருஷ:" என்றபடி வேதத்தில் புருஷ ஸூக்தத்தில் பகவான் புருஷோத்தமனான திருமால் ஆயிரம் தலைகளை உடையவனாகச் சொல்லப்படுகிறார். ஸ்ரீ நம்மாழ்வாரும் 'தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய்!' என்று திருமால் ஆயிரம் (கணக்கற்ற) தலைகளை உடையவன் எனக் குறிப்பிட்டுள்ளதையும் ஒப்பு நோக்கற்பாலது.

அடுத்த செய்யுளில் 'இராமனை முனிவர், கோயிலுக்கு அழைத்துச் சென்று நல்வினை முற்றுவித்தல்" தெரிவிக்கப்படுகிறது. அச் செய்யுளைக் காண்போம்!

நண்ணி நாகணை வள்ளலை நான்
மறைப
புண்ணியப் புனலாட்டிப் புலமையோர்
எண்ணு நல்வினை முற்றுவித்
தேற்றினான்
வெண்ணிறத்த தருப்பை விரித்தரோ!
(அயோ. கா. 122)

நாகணை வள்ளல் — ஆதிசேடன் மீது துயில் கொண்டுள்ள திருமால். தருப்பையை விரித்து அதில் ராமனை ஏற்றினான். முடிசூட்டுக்கு முதல் நாள் விரதம் இது. ஆக திருமாலின் கோயிலில் இராமன் விரதமிருந்தான் என்பதை கம்பன் வெளிப்படையாக வெளியிட்டுள்ளார்.

அடுத்தபடியாக, இராமன் கங்கையைக் கடந்த பின் நீராடி இறை வணக்கம் செய்ததை அயோத்யா காண்டம் 647வது செய்யுள் விவரிக்கிறது.

'துறை நறும் புனலாடிச் சுருதியோர்
உறையுளெய்தி யுணர்வுடை
யோருணர்
இறைவற் கை தொழு தேத்
தெரி யோம்பிப் பின்
அறிஞர் காதற் கமை
விருந்தாகினான்'

இராமான் புனலாடிய பின் அக்னி ஔபாசனம் முதலான வைதிக விதி இயற்றி "சுருதியோர் உறையுளெய்தி யுணர்வுடையோருணர் இறைவனை கைதொழுது" எனக்குறிப்பிடுகிறார்.

"நான் மறைகள் தேடியோடும் செல்வன்" என்ற ஆழ்வார்களும், "நாவல் அந்தணர் அருமறைப் பொருளே" என்று பரிபாடலிலும் "தோய்விலன் புலனைந்துக்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி" என்று நம்மாழ்வாராலும் கொண்டாடப் பெற்ற திருமாலை இராமன் கை தொழுததாகக் கம்பன் தெரிவிக்கிறார்.

அடுத்தபடியாக யுத்த காண்டத்தில்—மீட்சிப் படத்தில் இராவண வதம் முதலிய செயல்கள் முடிந்த பின் பிரமனும், சிவனும் ஏனைய தேவர்களும் இராமனை தோத்திரம் செய்தது தெரிவிக்கப்படுகிறது.

முதலில் பிரமன் இராமனுக்கு அவனுடைய சொருபத்தை (உண்மை தன்மையை) உணர்த்துகிறார்; அதனைக் காண்போம்!

மன்னா தொல் குலத் தவரினத்
துணையொரு மனிதன்
என்ன வுன்னலை யுன்னை நீ யிராம
கேளிதனைச்
சொன்ன நான் மறைமுடிவினிற்
றுணிந்த மெய்த்துணிவு
நின்ன லாதில்லை நின்னில் வேறுள
திலை நெடியோய்
—(யுத்த காண்டம்-
மீட்சிப்படலம்-99)

இதற்கு வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார் கூறும் பொருளைக் காண்போம்!

(ஸ்ரீராமனே! தலைவனே! பெருமையுடையவனே! உன்னைத் தொன்று தொட்டு வருகிற சூரியகுலத்தவரான அரசரது வருக்கத்தில் தோன்றிய மாத்திரமான மானிடரென்று எண்ணாதே; உன்னுடைய அந்த உண்மை நிலையை குறித்து(யான் சொல்லும்) இவ்விண்ணப்பத்தை நீ கேட்டருள்வாய்; சிறப்பித்துச் சொல்லப்படு

கிற நான்கு வேதங்களின் முடிவில் (வேதாந்தத்தில்) சித்தாந்தஞ் செய்யப்பட்ட உண்மையான தத்துவம், உன்னையல்லால் வேறு இலலை; உன்னையல்லது வேறு என்றும் நிலைத்து நிற்கும் பொருள் இல்லை.

(பாட பேதங்கள்: 1. குலத்தவரித்தனை, குலத்தவரினத்துனை, குலத்தவரினத்துளன், 2. உன்னினை, 3. இன்னமு மிறைவ 4. துணிவினில் 5. துணி பெருந்துணிபு துணிந்த வெத்துணிவும் 6. ஆகிலும் 7. பழையது வேறுள்ளிலை வேறுள்ளன, வேறுலகமும்)

இனி பிரமன் செய்த மூன்றாவது துதியை காண்போம்.

"எனக்கு மெண்வகை யொருவற்கு
மிமையவர்க் கிறைவன்
தனக்கும் பல்பெரு முனிவர்க்கு
முயிருடன் தழீ இய
அனைத்திினுக்கு நீயே பரமெனபதை
யறிந்தார்
வினைத் துவக்குடை வீட்டருந் தளை
நினறு மீள்வார்

(பிரமனாகிய) எனக்கும் எட்டு வகை வடிவையுடைய ஒரு கடவுளான சிவனுக்கும், தேவராசனான இந்திரனுக்கும் பலரான சிறந்த முனிவர்களுக்கும் உயிரோடு கூடிய எல்லாப் பொருள்களுக்கும் நீயே பரம் என்கிற உண்மைப் பொருளை அறிந்தார் (இரு) வினைகளின தொடர்ச்சியை உடைய, விடுவித்தற்கு அரிய பாச பந்தத்தினின்று மீண்டு முத்தி அடைவார்கள்).

ஆக இச் செய்யுள் மூலம் கம்பன் பரம்பொருள் பரந்தாமனே என்பதை உணர்நதவர்களுசகே முக்தி சித்திக்கும் எனக் கூறுகிறார்.

பரமனின் 6வது துதியை காண் போம்.

தோற்ற மென்ப தொன்றுனக்கில்லை
நின் கணே தோற்றும்
ஆற்றல் சான் சாரன் முதற் பகுதி மற்
றதனுளுளாம் பண்பால்



குழலூதும் கண்ணன் - கோவை சீதாராம.

காற்றை முன்னுடைப் பூதங்களவை
சென்று கடைக்கால
விற்று விற்றற்று வீவுறு நீ யென்றும்
விளியாய்

(உனக்கு (ஒரு பொருளினிடத்து) தோன்றுதல் என்கிற ஒரு நிலை (உற்பத்தி) இல்லை; வல்லமை மிக்க மூல ப்ரக்ருதி, உன்னிடத்தினின்றே வெளிப்பட்டது. மற்றை எல்லாத் தத்துவங்களும் அந்த மூலப்ரக்ருதியினின்று வருகையினால் வாயு முதலான பஞ்சபூதங்களும் (மற்றுமுள்ள) அத்தத்துவங்களும் சங்கார காலத்தில் தனித தனியாகப் பிரிபட்டு, லயித்து அழிவடையும்; நீயோ எப்பொழுதும் அழியாய்.

இனி பிரமனின் 8வது துதியைக் காண்போம்.

என்னுருக் கொடு இவ்வுலகினை
யீனுதி யிடையே

உன்னுருக் கொடு புகுந்து நின்றோம்
புதி யுமையோன்
தன்னுருக்கொடு துடைத்தி மற்றிது
தனி யருக்கன்
முன்னுருக் கொடு பகல் செய்யுந்
தரத்தது முதலோய்

(முதற்பொருளானவனே! (பிரமனாகிய) எனது வடிவத்தைக்கொண்டு (நீ)இவ்வுலகங்ளைப்படைக்கின்றாய். (திருமாலாகிய) உனது வடிவத்தைக் கொண்டு இடையில் எழுந்தருளி நின்று (அவ்வுலகங்களை) பாதுகாக்கின்றாய். சிவனது வடிவத்தைக் கொண்டு(அவற்றை) அழிக்கின்றாய். இது ஒப்பற்ற சூரியன் (யாவர்க்கும்) எதிரில் (கட்புலனாக விளங்குகிற தன்) வடிவத்தைக் கொண்டு பகற்பொழுதை செய்கின்ற தரத்தது.

சூரியன் தனது உதயத்தால் பகலையுண்டாக்கித் தான் சஞ்சரித்து உச்சமடைந்துகழிதலால் அப்பகலை நடத்தி தனது அஸ்தமனத்தால் அப்பகலை முடித்தல்போல, நீ திரிமூர்த்தி சொருபத்தில் பிரமனுக்கு அந்தராத்மாவாய் நின்று உலகத்தின் தோற்றத்தையும், திருமாலாகிய தானான நிலையில் நின்று அவ்வுலகத்தின் காப்பையும், சிவனுக்கு அந்தராத்மாவாய் நின்று அவ்வுலகத்தின் அழிவையும் செய்கின்றனை என்பதாம்.

இதுவரை பரமன்செய்த துதிகளைக் கண்டோம். இனி சிவபிரான், இராமபிரானுக்கு அவன் தன்மையையுணர்த்துதலை கூறும் 2 செய்யுட்களைக் காண்போம்!

என்று மாத்திரத் தேறமர் கடவுளு
மிசைத்தான்
உன்னை நீ யொன்று முணர்ந்திலை
போலு மாலுரவோய்
முன்னை யாதியா மூர்த்தி நீ மூவகை
யுலகின்
அன்னை சிதையா மாது நின் மார்பின
வநதமைந்தாள்.

என்று (பிரமன்கூறி) முடித்தவளவில் இடப வாகனத்தில் வீற்றிருப்பவனான சிவபெருமானும் சொல்பவனானான் - வலிமையுள்ளவனே நீ உன் தனமையை (இன்னதென்று) சிறிதும் அறியவில்லைபோலும். நீ மிகவும அநாதியாயுள்ள முழுமுதற் கடவுளாவாய்; மூன்று வகையான உலகங்களுக்கு தாயான சீதையாகிய தேவி (திருமாலான) உனது திருமார்பில் வந்து பொருந்தியுள்ள இலக்குமியே

துறக்குந் தன்மையை எல்லாற்
றொல்லை எவ்வுலகும்
பிறக்கும் பொன் வயிற்றன்னை யிப
பெய்வளை பிழைக்கின்
இறக்கும் பல்லுயி ரிறைவநீ யிவள்
திறத்திகழ்ச்சி
மறக்குந் தன்மைய தெனறனன்
மழுவலான் வழுத்தி

(யாவர்க்குந) தலைவனே பழமையான எல்லா வுலகங்களும் தோன்றுதற்கிடமான அழகிய வயிற்றையுடைய தாயாகிய சீதை (உன்னால் வெறுத்து)கைவிடத்தக்க தீயொழுக்கமுடைவளல்லள். அன்றியும் அணிந்த வளையல்களுடைய இச்சீதை விஷயத்தில் (நீ) தவறு நினைத்து கைவிட்டால், எல்லா வுயிர்களும் இறக்கும், (ஆதலால்) நீ இவள் விஷயத்தில் அவமதிப்புக்கொள்ளுதல் மறந்துவிடத்தக்கதே என்று சிவபெருமான் துதித்துக் கூறினான்.)

இனி திருமுடி சூட்டு படலத்தில் "விபீடணாதியர்க்கு அரண்மனையை காட்டுமாறு ஸ்ரீராமன் பரதனுக்கு கட்டளையிடுதலை" காண்போம்!

ஆய தோரளவிலையன் பரதனை
அருளி னோக்கித்
தூய வீடணற்கு மறறைச் சூரியன்
மகறகுந் தொல்லை
மேய வானரங் களாய வீரர்க்கும்
பிறர்க்கு நந்தம்
நாயகக் கோயிலுள்ள நலமெலாந்
தெரித்தி என்றான்.

(அப்படிப்பட்டதான ஒப்பற்ற சமயத்தில் ஸ்ரீராமன் பரதனை அன்போடு பார்த்து, (மனத்) தூய்மையுடையனாகிய விபீஷணனுக்கும் மற்றும் சூரிய குமாரனான சுக்ரீவனுக்கும் பழமை பொருந்திய வானரர்களான வீரர்க்கும் பிறர்க்கும் நம்முடைய நாயகத்தன்மை பூண்ட அரண்மனையிலுள்ள சிறப்புகளையெல்லாம் தெரிவிப்பாய் என்று கட்டளையிட்டான். (நாயகக் கோயில்-திருமாலெழுந்தருளி இருக்கும் கோயில்)

"இராமன் கட்டளையால் பரதன் நாயகக் கோயிலிற் புகுதலை" அடுத்த செய்புள் விவரிக்கிறது.

என்றலு மிறைஞ்சி மற்றைத் துணை
வர்கள் யாவரோடும்
சென்றன னெழுந்து மாடம பல
வொரீ இயுலகிற்றெய்வப்
பொன்றிணிந்த மரரோடும் பூமக
ளுறைந்து வாழும்
குன்றென விளங்கித் தோன்று நாயகக்
கோயில் புக்கான்.

(என்று கூறியவுடன், (பரதன்) வணங்கி மற்றை சினேகிதர் யாவரோடும் எழுந்து போய், மாடம் பல கடந்து, பொன்னாலலங்கரிக்கப்பட்டுத் தேவதைகளுடனே பூவிலுறையுந் தெய்வமாகிய இலக்குமி வசிக்கின்ற மேரு மலையைப்போல உலகில் விளங்கித் தோன்றுகின்ற தெய்வத்தன்மையுள்ள நாயகக்கோயிலிற் புகுந்தான்).

(நாயகக் கோயிலைக் கண்ட விபீஷணாதியர் ஆச்சரிய முற்றதை அடுத்த செய்யுளில் விவரிக்கின்றான் கம்பன். காண்போம் அதனை

வயிர மாணிக்க நீல மரகத முதலா
யுள்ள
செயிரறு மணிகளீன்ற செழுஞ்சுடர்க்
கற்றை சுற்ற
உயிர் துணுக்குறறு நெஞ்சு முள்ளமு
மூசலாட
மயர்வறு மனத்து வீர ரிமைப்பிலர்
மயங்கி நின்றார்.

(கலங்குதல் ஒருபோதுமில்லாத மனமுள்ள வீரரான விபீஷணன் முதலியவர்கள், வயிரமும், மாணிக்கமும், நீலமும், மரகதமும் முதலாகவுள்ள குற்றமற்ற இரத்தினங்கள் வீசுகின்ற மிக்க ஒளித் தொகுதிகள் எங்குஞ் சூழ்தலால், தம்முயிர் அச்சமுற்று

(42-ம் பக்கம் பார்க்க)

# திருப்பல்லாண்டு

புலவர் பொன் சுப்பிரமணியன்,
திருக்கண்ணபுரம்

'திருப்பல்லாண்டு' திவ்யப் பிரபந்தத்தின் முதலாயிரப் பகுதியைச் சேர்ந்தது; பெரியாழ்வார் அருளிச் செய்தது. இதில் 12 பாசுரங்கள் உள்ளன. ஒவ்வொரு பாசுரத்திலும் "பல்லாண்டு பல்லாண்டு" என்று சொல்லி மங்களாசாசனம் செய்திருப்பதால் அதனையே நிருபகமாக்கிப் "பல்லாண்டு" என்று திருநாமம் சாத்தப் பெற்றது இப்பிரபந்தம்.

மதுரைக்கதிபதியாகிய வல்லப தேவன் என்ற பாண்டிய அரசனது புலவர் குழாத்திலே சென்று, தான் யாதொரு குருவினிடத்தும் கல்வி கற்காதிருந்தும் பரதத்துவ நிர்ணயத்திற்கு வேண்டிய வேதங்கள் கூறும் அனைத்தையும் எடுத்துரைத்து வெற்றியுடன் அவ்வரசன் ஏற்படுத்தியிருந்த பொற்கிழியை அறுத்துக் கொண்ட பிறகு அரசன் அவரை யானையின் மேல் ஏற்றி வீதியுலா வருகையில் அத்திருக் காட்சியைக் கண்டு இன்பம் உறுதற்காக ஸ்ரீவைகுண்டநாதன் பரிவாரத்துடன் தோன்றி பெரியாழ்வாருக்கு எதிரில் காட்சியருளினார். இக்காட்சியைக் கண்டவுடன் ஆழ்வார் "இத்தகு கோலம் பூண்ட எம்பெருமானுக்குப் இப்பூவுலகிலே யாரால் என்ன தீமை விளையுமோ!" என்று அஞ்சி அப்பெருமான் மீதுள்ள பரிவு மேலிட்டு இப்பாசுரம் அருளிச் செய்தார் என்பது வரலாறு.

'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா உன்
சேவடி செவ்வி திருக்காப்பு
அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும
சுடராழியும் பல்லாண்டு
படைபோர்புக்கு முழங்கும்
அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே'

இவற்றுள் முதல் பாசுரத்தில் பெரியாழ்வாருக்கு எதிரில் மேல் சொன்ன சந்தர்ப்பத்தில் நிகழ்ந்த ஒரு காட்சி குறிக்கப்பட்டிருக்கிறது. தனக்கு என்ன குறை நேர்ந்து விடுமோ என்று அஞ்சிய ஆழ்வாரைக் கண்டு எம்பெருமான் தான் கிருஷ்ணாவதார காலத்தில் கம்சனால் ஏவப்பட்ட சாணூரான், முஷ்டிகன் முதலிய மல்லர்களை அழிக்க உதவிய தனது தோள் வலிமையைக் காட்டினார். இதைக்கண்டதும் ஆழ்வாருக்கு முன்னைக் காட்டிலும் அதிகமாய் கவலை உண்டாயிற்று. பகவானுக்குத் தோள்வலி அதிகமாய் ஏற்பட்டிருப்பதின் காரணமாக அவர், பகைவன் எத்திறத்தவனாயினும் சரி என்று எணணி போருக்கு எழுந்தருளுவாரே, அதனால் அவருக்கு யாரால் தீங்கு நேருமோ என்று கருதினமையால் அச்சம் அதிகரித்ததாயிற்று. இந்தக் குறிப்புதான் "மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா, உன் சேவடி செவ்வி திருக்காப்பு" என்ற பகுதியிலே அடங்கிக் கிடக்கிறது.

இரண்டாம் பாசுரத்திலே "அடியோமோடும்" என்று சொல்லித் தம்முடைய மங்களத்தையும் விரும்பிய தன் காரணம் தம்மைப் போன்ற அடியார்கள் இல்லையானால் எம்பெருமானுக்குத் தீங்கு விளையக் கூடுமோ என்ற அச்சம் பற்றி என்க. முதலிரண்டு பாசுரங்களையும் சேர்த்து ஒரு பாட்டாகக் கொள்வது மரபு.

அடுத்துள்ள 8 முதல் 11 பாசுரங்கள் மூவகைத்தாய அதிகாரிகளைக் குறித்துப் பாடப் பெற்றனவாகும். அவ்வதிகாரிகள் பின்வருமாறு :

(1) எம்பெருமானுடைய சேவையையே விரும்பி அதிலேயே நின்றிருப்பவர்கள். இவர்களைக் குறித்த பாசுரங்கள் 3, 6, 9

(2) ஆத்மானுபவத்தை அதாவது கைவல்லியத்தை விரும்பும் நிஷ்டர்கள். இவர்களைக் குறித்த பாசுரங்கள் 4, 7, 10.

(3) செல்வத்தையே விரும்புபவர்கள். இவர்களைக்குறித்த பாசுரங்கள் 5, 8, 11. 12-ஆவது பாசுரங்கள். எப்பொழுதும் எம்பெருமானுடைய மங்களாசாசனம் அடையும் பலன் யாது என்பதைக் குறிக்கிறது.

பகவதனுபவத்தையே விரும்பும் அடியார்கள் :-

"வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்
வந்து மண்ணும் மனமும் கொண்மின்
கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள்
குழுவினில் புகுதலொட்டோம்
ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்
இராக்கதர்வாழ் இலங்கை
பாழாளாகப்படை பொருதானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே'

"எந்தை தந்தை தந்தைதம்
மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி
வந்து வழிவழி யாட்செய்கின்றோம்
திருவோணத் திருவிழாவில்
அந்தியம் போதிலரி யுருவாகி
அரியை அழித்தவனை
பந்தனை தீரப் பல்லாண்டு
பல்லாயிரத் தாண்டென்று பாடுதுமே"

உடுத்துக்களைத்த நின் பீதக வாடை'
யுடுத்துக கலந்ததுண்டு
தொடுத்த துழாய் மலா சூடு களைந
தன சூடுமித் தொண்டர்களோம்
வி த்தசைக் கருமந் திருத்தித்
திருவோணத் திருவிழாவில
படுத்த பைந்நாகணைப் பள்ளி
கொண்டா
னுக்குப் பல்லாண்டு கூறுதுமே'

இங்ஙனம் பலவகை அதிகாரிகளை இவ்வாழ்வார் அழைப்பதன் கருத்து யாதெனில் தனியராய் இருந்து தான் மட்டும் மங்களாசாசனம் செய்து எம் பெருமானை அனுபவிப்பது முறை யாகாது என்றும் இந்த நல்ல காரி யத்தில் தக்க பலபேர்களும் வந்து சேர்ந்து கொள்ள வேணுமென்றும் நினைத்தபடியாலே, தான் பெற்ற இன்பம் இவ்வையகம் முழுவதும் பெறவேண்டும் என்று உள்ளும்பரந்த மனப்பான்மை உடையராதலின் இங்ஙனம் துணை கூட்டிக் கொண் டார் எனக் கொள்ளல் வேண்டும்.

கேவலம் வயிறு வளர்ப்பதற்காக பிறர் இடத்தில் அடிமைத்தொழில் பூண்டிருக்குங் கூட்டத்தாரோடு சேராமல் எப்பொழுதும் எம்பெரு மானுடைய அடிமைத் தொழிலில் ஈடுபட்டு நிலைத்திருப்பவர்களை முதலில் 3ஆம் பாசுரத்தில் அழைக் கின்றார். அங்ஙனம் அழைக்கும் போது 'அடியார்களாகிய நாங்கள் ஏழு தலைமுறையாக ஒருவகைக் குற்றமும் இல்லாதவர்கள். எம் பெருமானுக்குப் பாடுவதே எங்கள் தொழில்' என்று கூறி பரமனது அடி யார்களின் தன்மையை விளக்குகின் றார். அப்படி அழைக்கப்பட்ட அடி யார்கள் "நாங்களும் உம்மைப் போலவே பல தலைமுறையாக எம் பெருமானுக்கு அடிமை செய்கிறவர் கள்தாம்" என்று கூறி தாங்கள் இறைவனுக்கு உரிய காலங்களில் பணி செய்து வருவதையும் அவருக்கு இடையறாது மங்களாசாசனம் செய் கிறவர்கள் என்பதையும் 9ஆம் பாசு ரத்தில் இத்தகைய அடியார்கள் தங் களுக்கென்று உணவு, உடை, மலர் முதலியற்றை விலைக்கு வாங்கி உப யோகிப்பதில்லையென்றும், எம்பெரு மான் அனுபவித்துக்கழிந்தவற்றையே உயர்ந்த பிரசாதமாகக் கருதி அவற் றையே உண்பதும், உடுப்பதும், சூடு வதும் ஆகிய தொழில்களைச் செய்வ தாயும் மற்றும் அப்பெருமானுக்கு எந்தக் காரியம் ஆக வேண்டுமோ அந்தக் காரியத்தை ஒழுங்குபடச் செய்து முடிப்பதோடு அல்லாமல் பல்லாண்டு பாடுதலையும் செய்து வருபவர்கள் என்று மேலும் தங்களது இயல்பைக் கூறி இறும்பூது எய்து கிறார்கள்.

## செல்வத்தை விரும்பி இறைவனை வழிபடுபவர்கள்

'ஏடுநிலத்திலிடுவதன் முன்னம் வந்து
எங்கள் குழாம் புகுந்து
கூடுமன முடையீர்கள் வரம்பொழி
வந்தெல்லைக் கூடுமினோ
நாடும நகரமும் நன்கறிய
நமோ நாராயணய வென்று
பாடு மனமுடைப் பத்தருள்ளீர்
வந்து பல்லாண்டு கூறுமினோ.'

'தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி
திகழ் திருச்சக்கரத்தின்
கோயிற் பொறியாலே
யொற்றுண்டு நின்று
குடியாட் செய்கின்றோம்
மாயப் பொருபடை வாணனை
ஆயிரம் தோளும பொழிகுருதி
பாயச் சுழற்றிய ஆழி
வல்லானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே'

'எந்தாளெம்பெருமான் உன்றனக்
கடியோமென றெழுத்துப்பட்ட
அநநாளே அடியோங்களடிக்குடில்
வீடுபெற்றுய்ந்தது காண்
செந்நாள்தோற்றித் திருமதுரையுட்
சிலை குனித்து ஐந்தலைய
பைந்நாகப் பாய்ந்தவனே
உனனைப் பல்லாண்டு கூறுதுமே'

ஆத்மானுபவம் மாத்திரம் செய்த லாகிய, மீட்சியற்ற, கைவல்லியத்தை அடைந்து கெட்டுவிடாமல், "ஓம், நம" என்ற சொற்களை மட்டும் சொல்லிக் கொண்டு இறைவனை ஆத்மானுபவம்வேண்டி வழிபடுதலை விட்டு அஷ்டாக்ஷரமாகிய திருமந் திரத்தைச் சொல்லி எம்பெருமா னுக்கு மங்களாசாசனம் செய்யும்படி இவர்கள் 4ஆம் பாசுரத்தில் அழைக் கப்படுகிறார்கள். அப்படி அழைக் கப்பட்டவர்கள், சங்கு சக்கரங்க ளாலே திருவிலச்சினை செய்து கொண்டு அடிமை செய்பவர்களாய் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அவருக்கு அடிமை செய்த திருவாழியாழ்வா னுக்கும் மங்களாசாசனம் செய்பவர் களாய் மாறின நிலை 7ஆம் பாசு ரத்தில் கூறப்படுகிறது.

10ஆம் பாசுரத்தில் எம்பெருமா னுக்கு அடியவர்களாய் மாறிய அக் கணம் முதற்கொண்டு வழிவழியாக அவர்கள் உஜ்ஜீவித்து விட்டதாக உறுதிமொழி கூறி மங்களாசாசனத் தில் நிலைபெற்ற தன்மை கூறப்படு கிறது.

'அண்டக் குலத்துக் கதிபதியாகி
அசுரரிராக்கதரை
இண்டைக்குலத்தை யெடுத்துக்
களைந்த
இருடிகேசன்றனுக்கு
தொணடக்குலத்திலுள்ளீர்
வந்தடி தொழுது
ஆயிரம் நாமம் சொல்லி
பண்டைக் குலத்தைத் தவிர்த்து
பல்லாண்டு பல்லாயிரத்
தாண்டென்மினே'

'நெய்யிடை நல்லதோர் சோறும்
நியதமுமத்தாணிச சேவகமும்
கையடக்காயும் கழுத்துக்குப் பூணொடு
காதுக்குக் குண்டலமும்
மெய்யிட நல்லதோர் சாந்தமுந் தந்து
என்னை வெள்ளுயிராகக வல்ல
பையுடை நாகப் படைகொடி
யானுக்குப்
பல்லாண்டு கூறுவனே'

(40-ம் பக்கம் பார்க்க)

# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பஸ் நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்தி பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் வேண்டும்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில வ்யூ பாதிக் குடில்கள் சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) ரூ. 15/-

எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது ரூ. 25/-

எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத் தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 25/-

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி. பி. சி. மூன்றாவது வரிசை முதலியன

டி. பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 60/-

வி.வி சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 ரூ. 70/-

எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

டி.பி , ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 15/-

ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) ரூ. 30/-

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதயில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் ரூ. 50/-

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக் குடில்கள் ரூ. 70/-

சிறப்பமைப்புக் குடில்கள் ரூ. 100/-

எச். ஆர். ஜி. குடில்கள் ரூ. 250/-

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

ஒரு அறைத்தொகுதிக்கு ரூ. 250/-

ஸ்ரீ நிகேதன் விருநதினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1500/-

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

முதல் தளத்தில் பெரிய அறைத் தொகுதி மற்றும கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 750/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500-/

ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-

(திருப்புக)

ஸ்ரீநிவாசா நிலையம்
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2 00/-

வித்யா சதன்
பெரிய அறைத் தொகுதி ரூ. 750/-
,, மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-

கோதாவரி சதன்
அறைததொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினா விடுதி முழுவதும் ரூ. 1000/-

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி. தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண். 272, 26?, 266, 267 ரூ. 100/-

டி.பி. குடில் எண. 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-

ரூயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-

ஸ்ரீ சீதாராம திருமண மணடபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித தலைவர், (ஆர). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினா விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள் :-
* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளை பயன்படுத்தினால், நிர்ணயிக்கப்பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள் :

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன கூடிய இட வசதிகள உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். (தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-
கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103.

இரயில் நிலயத்திற்கு வடக்குப்புறம உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :
அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில உள்ளது)
பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத் தொகுதி ரூ. 40/-
திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண. 20103.

# கண்ணனைக் கண்ட கண்கள்

தேனினும் இனிய என்று சுவைப் பொருட்களுள் எல்லாம் சிறந்ததாகத் தேனை உபமானமாக உரைப்பர். இப்படியே 'குழலினிது யாழினிது' என செவிக்கினிய ஓசைகளில் குழலோசையை மிகச் சிறந்ததாகக் குறிப்பர் இலக்கியச் சான்றோர். தேன் சுவைத்த பிறகு, குழல் இனிமையில் தோய்ந்த பிறகு, நாவும் செவியும் பிற சுவையில் பிற ஒலியில் விரும்பி ஈடுபடா. இப்படித்தான் அழகு என்பதோர் வடிவாகி அழியாப்பேரழகாக விளங்கும் திருமால் குழந்தைக் கண்ணன் வடிவத்தில் அழகெல்லாம் திரண்டு பொலிகின்ற காட்சியைக் கண்ட கண்கள் வேறொன்றை விரும்பிக்காணா.

இந்த அழகுக் காட்சி அநுபவம் ஆழ்வார்கள் பெற்ற பேறு. அந்த அநுபவத்தை அடியோமானயாமும் துய்க்கப் பலவாறு தம் பசுரங்களாலே பண்ணிப்பண்ணி எடுத்துரைத்து இன்புறுகின்றனர் ஆழ்வார்கள்.

கண்கள் காண்டற்கரியனான எம்பெருமான் ஆழ்வார்களுக்குத் தன் இயற்கை இன்னருளால் மயர்வற மதிநல மருளி, தன் வைபவங்கள் அனைத்தும் கருத்துக்கு எளிமையாய்க்காட்டினான. ஆழ்வார்கள் பதின்மரும் தாங்கள் அருளிய ஈரச் சொல்லான திவ்ய ப்ரபந்தங்களில் எம்பெருமானுடைய பரத்வ, வியூஹ, விபவ, அந்தர்யாமி மற்றும் அர்ச்சாவதார வைபவங்களை அநுபவித்துப் பாடியுள்ளனர். "என்றேனும் கட் கண்ணாற் காணத வவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணேற் காணுமுணர்ந்து" (பெரிய திருவந்தாதி 28) என்கிறபடியே கண்கள் காண்டற்கரியனான கண்ணனை நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டு களித்தவர் நம்மாழ்வார். ஆழ்வாரது பிறப்பை, 'க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வ ஜந்மம்' என்கிறபடியே கணணன் திறத்து ஆசையே ஒரு வடிவு கொண்டாற் போலே இருப்பதாக அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்னும் ஆசார்யர் கூறுவர்.



'ஆழ்வார்கள் எல்லாரும் க்ருஷ்ணாவதாரம் என்றவாறே மிகவும் மண்டியிருப்பார்கள். இதற்குக் காரணம் என்ன என்று நஞ்சீயர் தம் ஆசார்யரான பட்டரைக் கேட்க, அதற்கு பட்டரும், 'ஒருவனுக்குத் துக்கம் சில நாள் கழிந்தால் பொறுக்கலாம். கிட்டினால் பொறுத்திருக்கப் போகாதன்றோ. அப்படியே அல்லாத அவதாரங்களைப் போலன்றிக்கே, ஒரே காலமாகையாலே ஒரு செவ்வாய் கிழமை முற்படப் பெற்றிலோம், பாவியேன்! பல்விலே பட்டுத்தெறிப்பதே எனனுமிழவாலே வயிறெரித்தலேயாயிருக்கும்' என்றருளிச் செய்தார். இதன் உட்கருத்து யாதெனில் நம்மாழ்வார் கலி தொடங்கி 43வது நாள் பிறந்தவர். செவ்வாய் என்னும் கிரகம் ஒரு ராசியில் $1\frac{1}{2}$ மாதம் இருக்கும். $1\frac{1}{2}$ மாதத்திற்கு முன்பு பிறந்திருந்தால் காலம் துவாபரயுகமாகி ஆழ்வார்க்குக் கண்ணனை நேரில் காணும் வாய்ப்பு ஏற்பட்டு இருக்கும் என்பதேயாம்.

இத்தகைய பெற்றிமையுடைய க்ருஷ்ணாவதாரத்தில்,

> 'மத்துறு கடைவெண்ணெய்களவினில்
> உரவிடையாப்புண்டு
> எத்திறமுரலினோடு இணைந்திருந்
> தேங்கிய எளிவே'
> (திருவாய்மொழி—1-3-1)

என்கிறபடியே கண்ணன் கடைவெண்ணெயைக் களவினில் ஆப்புண்டு உரலினோடு பிணைத்தபோது இருந்த எளிவந்த தன்மையை ஆழ்வார் நினைத்து எத்திறம்! எத்திறம்! என்று மோகித்து ஆறு மாத காலம் இருந்தார். இப்படி மோகித்திருந்த இருப்பை திருவாய்மொழியை உரையால் காத்த குணவாளர்களான ஆசார்யர்கள் அநுபவிக்கும் பாங்கு சுவை மிக்கது.

'உரலினோடு இணைந்து உள்ளும் மெய்யர் கட்டுண்டு ஏங்கினபடியேயிருக்கும் எளிமையைக் கண்டு 'எத்திறம்' என்று மோகித்ததாகப் பணிப்பர் பிள்ளான்.

டாக்டர் மா. வரதராஜன்,
திருப்பதி.

'உடலோடு கட்டுண்டு உரலோடு தன்னோடு வாசியற இருநது ஏங்கின எளிமை கண்டு' எத்திறம் என்று மோகித்ததாகக் கூறுவர்நஞ்சீயர்.

'...நவநீதசௌர்ய நகர க்ஷோபத்திலே (வெண்ணெய் களவு செய்த காரணத்தால் நகரத்திலுண்டான பரபரப்பு) அகப்பட்டு இளமணல் பாய்ந்து (இரங்கிய மனத்தையுடைய ராதல்)' எத்திறம்' என்று மோகித்துக்கிடநததாகக்கூறுவர் நம்பிள்ளை.

'உரல மூச்சுவிடிலும் தான் மூச்சு விடாதே அசித்வ்யாவ்ருத்தனா யிருந்தபடி (அசித்தைக் காட்டிலும் வாசிதோற்றவிருந்தபடி)' என்ற எளிமையைக்கண்டு'எததிறம்' என்று மோகித்ததாகச்சுவைப்படக் கூறுவர் பெரியவாச்சான்பிள்ளை.

'உடலோடொக்க சலியாதே யிருந்து அச்சத்தாலே ஏங்கின குரல் இரங்கமாட்டாத எளிமை' கண்டு 'எத்திறம்' என்று மோகித்ததாக வாதிகேசரி சீயர் அநுபவிப்பர்.

இவ்வாறு ஆழ்வார ஒருகால் மோகித்திருந்தோடல்லாமல் 'பிறந்த வாறும்' (5-10) என்ற பதிகத்தில் கண்ணன் கர்மத்துக்கு வசப்படாத வனாய், தன் ஞானசக்திகள் முதலான எந்த குணங்களையும் விடாதவனாய், அடியார்களைக் காக்கும்பொருட்டு மனிதனாகப் பிறந்த நிலையை நினைத்து மற்றொரு ஆறுமாதகாலம் மோகித்திருக்கிறார். பிறந்தவாற்றில் ஆழ்வாருக்கு உணடான இழவெல்லாம் தீரும்படி 'குரவையாச்சியரோடு' (5-4) என்னும் பதிகத்தில், இந்த உலகில் ஸ்ரீ பிருந்தாவனத்தில் தன்னுடைய திவ்ய அவதாரம் தொடங்கித்திருநாட்டில் எழுந்தருளியிருக்குமவரை நடுவிலுள்ள திருக்குரவை கோத்தது, குனறமெடுத்தது, நாகத்தைக் காய்ந்தது, கேயத்தீங்குழலூதியது, அதன் காரணமாக ஆநிரை மேய்த்தது, நப்பினனை தோள மணந்தது, மல்லரைச் செற்றது, களிற்றைக் கொன்றது, ஆய்ச்சி உரலோடார்க்க இரங்கியது, பேய்ச்சி பாலுணடது, சகடத்தைச் சாடியது, கஞ்சனைக் கொனறது, புள்ளைப் பிளந்தது, குருந்தொசித்தது, வாணனாயிரம்தோள் துணித்தது, பாரதப் போர் செய்தது ஆகிய எல்லாவித திருவிளையாடல்களையும் கண்ணன் காட்டக் கண்டு அநுபவித்து, 'எனக்கார் பிறர் நாயகர்'என்று மகிழ்வெய்துவர் ஆழ்வார்.

**குரவைக் கூத்து :**

கண்ணன் ஆடிய கூத்து வகைகளில் குரவைக் கூத்தும் ஒன்று. கணணன் அமுத செயலையேகாட்டி 'அமுதவப்பண்' என்ற பெயர் சூட்டுவர் ஆழ்வார்.

பெண்கள் பெண்களோடு கை கோத்துக் கொண்டு ஆடும் கூத்தே குரவைக் கூத்தாகும். எம்பெருமான் அநுபவித்தப்படியே ஆழ்வார் பேசுகிறாராகையாலே, திருக்குரவையில் பெண்களோடு கண்ணனுக்கு உண்டான கலவியை முந்துற முன்னம் எம்பெருமான் ஆழ்வார்க்குக்காட்டிக கொடுத்தான். பெண்களுடைய மாலையிலே இடையீடாகத் தன்னை கோக்கிறபோது 'வேறொருவன் வந்து கலந்தான்' என்று தோற்றாத படி அவர்களோடே ஒரு நீராகக் கலந்தான் கண்ணன். எல்லாப் பெண்களும் தன் கை கோத்தாராம்படி வகைமாலைபோலே இடையிடையே தன்னைக் கலந்து கோத்துக் கண்ணன் இருந்ததாகக் கூறுவர் வாதிகேசரி சீயர். ஐந்து லக்ஷங்குடியிலுள்ள பெண்களோடே கலந்த அன்பு ஆழ்வார் ஒருவரோடு கலந்தபோது உண்டானதாக அநுபவிப்பர் நம்பிள்ளை.

**குன்றமொன்றேந்தியது :**

சுவர்க்கத்தில் அப்ஸர கன்னிகைகளோடு கூட்டமாக இருந்து புண்ணியத்திற்கு தக்கபடி அநுபவித்துச் சுகமாக இருப்பதை எண்ணுபவன் இந்திரன். அவ்வநுபவத்தை இவ்விடத்

தில் பெண்களோடு கண்ணன் இருக்கும் இருப்பில் கண்டானா. அது பொறுக்கமாட்டாமையால் தனக்கு என்று வைத்த சோற்றை உண்டான் என்ற வ்யாஜத்தைக் கொண்டு கல் மழையை வரவழைத்தான் இந்திரன். அப்போது கண்ணன் கைக்கு எட்டின ஒரு மலையை எடுத்துக் காத்தருளினான. கண்ணன் பிறர்பொருட்டு ஒரு மலையை எடுத்த செய்கையாலே இது அவன் கைக்கு ஓர் ஆபரணமாக இருந்ததாம். மலையை ஏந்தியது பூ ஏந்தினாற்போலேயிருந்தது எனபர் நம்பிள்ளை. ஏழு வயதிலே ஏழு நாள் ஒருபடிப்பட தரித்துக்கொண்டு நின்ற கோலமன்றோ ஆழ்வாரை இரவும் பகலும் சொல்லுவித்தது.

**நாகங்காய்ந்தது :**

'உரவு நீர்ப்பொய்கை நாகங்காய்ந்ததும்' என்று விஷஜலம் நிறைந்த பொய்கையில் காளியனை முனிந்து முடித்ததைக் கூறுவர். அதாவது பொய்கையானது தறை காண முடியாமையாலுண்டான ஆழமும் மிடுக்கையுடைய நீரும்கொண்டு இருந்தது. மேலும் காளியன் விஷத்தாலே ஒருவரும் கிட்டமுடியாதபடி இருந்தது. அப்படிப்பட்ட பொய்கையிலுள்ள நாகத்தை முனிந்து முடித்தான் கண்ணன். 'பெண்களோட்டை ஜலக்ரீடை விரோதி' என்று காளியனை ஓட்டியதாகக் கூறுவர் பெரியவாச்சான் பிள்ளை.

**கேயத்தீங்குழலூதியது :**

இராமனுக்கு வில் ஏற்கை கைவந்த கலைபோல கண்ணனுக்குக் குழல் ஊதுவது கைவந்த கலை. பெண்களை அழைப்பதற்கும் பசுக்களை மேய்ப்பதற்கும் பயன்படுத்தும் ஒரே கருவி கண்ணன் குழலூதுவதாகும். குழலை ஊதினால் பசுக்கள் வயிறு நிறையுமாம். பெண்களின நெஞ்சை வசப்படுத்துவதற்காகத் தாழ்ச்சி தோற்றின கேயங்களைவைத்து இனிமையாகக் குழல் ஊதுவான் கண்ணன். அக்குழல் ஒலி கேட்டுப் பெண்கள் வருவதுபோல பசுக்களும் வருமாம். இந்நிகழ்ச்சியைக் 'கேயத்தீங்குழல் ஊதித்தும் நிரைமேய்த்ததும்' என்ற தொடரால் அநுபவிப்பர் ஆழ்வார். ஆழ்வார் திருவுள்ளமறிந்த ஆசார்யர்களில் பிள்ளான், சேதாசேதந ஸமஸ்த வஸ்துக்களும் நீராய் உருகும்படி குழலூதினதாகக் கூறுவர். கண்ணனுக்கும் பெண்களுக்கும் உள்ள ஈடுபாடு தோற்றும்படி பெரியவாச்சான் பிள்ளை இங்கு அநுபவிப்பர். அதாவது, கண்ணன் பரதந்த்ரனாய்ப் பசு மேய்க்கச் சென்றான். திரும்பி வருவதற்கு தாமதமாகிவிட்டதாம். இது கண்ணன் நெஞ்சை வருத்தியது. 'பரதந்த்ரனாய்ப் பசு மேய்க்கப் போகையாலே வரவு தாழ்த்தேன் இத்தனை' என்றாற்போலே சில பாசுரங்களை நெஞ்சை வருததும் இசையோடே கூட்டிப் பெண்கள் நெஞ்சில் மறம் மாறும்படி குழல் ஊதினதாகக் கூறுவர். ஆழ்வார் மேலுள்ள ஊற்றத்தைக் காட்டும் வகையில், தான் நினைத்த பெண்களுடைய பெயரை வைத்துப் புணர்த்துச் சுவைப்பாட்டாக வைத்துக கண்ணன் குழலூதினதாகக் கூறுவர் நம்பிள்ளை.

**நப்பின்னை தோள்கள் மணந்தது :**

பசு மேய்த்த களைப்பு தீரக் கண்ணன் நப்பின்னைப்பிராட்டி தோளோடு அணைவன். நப்பின்னைப் பிராட்டியும் கெண்டைபோலே அழகிய கண்களாலே குளிர நோக்குவள். அவளது அழகிய திருக்குழலின் பரிமளம் கண்ணன் திருமேனியெல்லாம வெள்ளமாம்படி வீசும் 'வாசப் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும்' என்று நப்பின்னைப்பிராட்டியின திருக்குழலுக்கு ஏற்றம சொல்லுகிறார். அதாவது பெரிய பிராட்டியார் திருக்குழல் 'வாசம் செய்கிற குழல்' நப்பின்னைப் பிராட்டியதோவெனில் 'வாசம் தானான குழல்'. வாசஞ் செய் பூங்குழலிற் காட்டிலும் பொலிவை வுடைத்தான தன்னேற்றமுடைய குழலையுடையவள் நப்பின்னை என்பர் நம்பிள்ளை.

'பின்னை தோள்கள் மணந்ததும்' என்பதற்கு பசுமேய்த்து வந்த சிரமம் தீருகை மட்டுமல்லாமல் நப்பின்னைப் பிராட்டியை பிரிகையாலுண்டான ஸந்தாபமும் தீருகைக்கு அவள்தோள்களைக் கலந்ததாகச் சுவைபட அநுபவிப்பா பிள்ளான்.

**மல்லரைச் செற்றது :**

கம்சனால் ஏவப்பட்ட மிடுக்குக்கு ஒப்பில்லாத மல்லர்களைச் சிரமமில்லாமல் கண்ணனும் பலராமனும் கொன்றனர். மல்லர்கள் மிடுக்குக்கு உலகில் ஒப்பாருமில்லை. சிறுவர்களான பலராமனும் கணணனும் சொற்படி கேட்கும் தன்மையராகை யாலே மென்மையான ஸ்வபாவத்தை யுடையவராய் இருந்தனர். மல்லர்களைக் கொல்வதற்காகச் சென்ற போது வழியில் கூனி என்பவள் நல்ல உயர்ந்த சந்தனத்தை இவ்விருவருக்கும் சாத்தினாள். இவ்விடத்தில் நடந்த நிகழ்ச்சியை நம்பிள்ளை நயம்பட அநுபவிப்பர். 'கூனிசாத்திவிட்ட சாந்து குறியழியாமே காணும் அவர்களோடு வ்யாபரித்தது. மல்லரோடு கூட ஸர்வாவயவங்களும் பொருந்தி வ்யாபரியாநிற்கச்செய்தே, சாத்தின சாந்து குறியழிந்ததில்லை காணும்" என்பர். இவ்வாறு சாந்து அழியாமைக்குக்காரணம் யாதெனில் கூனி சாத்திவிட்ட பிறகு பெண்கள் கண்ணாலே அடையாளமிட்டுவிடுகை யாலே இவனால் அழிக்கவும் போகாதிருந்தது. இவன் மல்லரோடே அழித்தானாகிலும், 'மற்றெங்கேனும் அழித்தான்' என்று பெண்கள் நினைப்பதாகக் கூறுவர். 'இது அழிந்து அவர்களிடம் போனால் அவர்கள் கோஷ்டியில் சேரவிடார்கள்' என்று கண்ணன் நினைவை எடுத்துரைப்பர் நம்பிள்ளை. இவ்வாறு க்ஷத்ரிய ஜன்மத்துக்கு ஈடாக மல்லரோடு யுத்தம் பண்ணியதை 'நிகரில் மல்லரைச் செற்றதும்' என்றும் இடைக்குல ஜன்மத்துக்கு ஒப்பாம்படி பசுக்களை

மேய்த்ததை 'நிரை மேய்த்ததும்' என்றும் அநுபவிப்பர் ஆழ்வார்.

'நோவ ஆய்ச்சி உரலோடார்க்க இரங்
கிறும் வஞ்சப் பெண்ணைச்
சாவப் பாலுண்டதும் ஊர்சகட மிறச்
சாடியதும்'
(6-4- )

என்ற இரண்டடிகளால் அடியார்க்கு எளியனான இருப்பிலே விரோதிகளை மாய்த்த கண்ணனை அநுபவிக்கிறார் ஆழ்வார்.

**ஆய்ச்சி உரலோடார்க்க இரங்கியது:**

வெண்ணெய் களவு செய்ததற்காகக் கண்ணனை உடல் நோமபடியாக ஆய்ச்சியானவள் உரலோடு இறுகக் கட்டினாள். கண்ணனும் இக்கட்டுக்கு ஈடுபட்டிருந்தான். தாயனபு உள்ளதனையும் சீற்றமும் உண்டன்றோ. தாயார் கட்டின கட்டுக்கு வேறு வழியில்லாமல் நோவுபட்டு பயமுடன் இருநததாகக் கூறுவர் பெரியவாசசான்பிள்ளை. மேலும் ஆய்ச்சியர் கட்டிய கட்டை ஆழ்வார் தம் திருமேனியில் கட்டினாற்போலே நோவுபடுவதாக அநுபவிப்பர். ஆழ்வார் தம் திருமேனியில் கயிறு உறுத்தினாற்போலே இருந்து 'நோவ' என்று சொன்னதாக அநுபவிப்பர் நம்பிள்ளை. மேலும் கண்ணன் கட்டுண்டு இருந்த நிலையை 'ஒரு மத்தகஜத்தைத் தறியோடே சேர்ந்தாற்போலே காணும் இவன் கட்டுண்டு நின்ற நிலை!' என்பர்.

**வஞ்சப் பெண்ணைச் சாவப் பாலுண்டது:**

கம்சனால் ஏவப்பட்ட பூதனை என்னும பேய்ச்சி முலையை உண்டு அவளை முடித்தான் கண்ணன். வஞ்சப் பெண்ணைச் சாவப் பாலுண்ட விதத்தை நம்பிள்ளை அழகாகச் சித்தரிப்பர். அதாவது யசோதைப் பிராட்டியிடம் முலையுண்ணும்போது தான் உயிர் பெற உண்பான். அதுபோல பேய்ச்சி முலையை உண்கிற போதும் தான் உயிர் பெற முலையுண்டானாம். 'இவன் பிள்ளையாயே முலையுண்டான் அத்தனை; வஸ்து ஸ்வபாவத்தாலேப்ரதிகூலர்(பேய்ச்சி) முடிந்ததித்தனையிறே' என்பர் நம்பிள்ளை. 'தாய் வடிவு கொண்டு வந்த பூதனை முடியும் நச்சுப்பாலுண்டதும், சூர்ப்பணகையைப்போலே பின்பிருந்து பூசல் விளைக்கவையாதே முடிக்கப்பெற்றபடி' என்பர் பெரியவாச்சான்பிள்ளை. அதாவது சூர்ப்பணகையின் அங்கபங்கம் இலங்கையை அழியச் செய்ததன்றோ.

**சகடத்தைச் சாடியது:**

பரிகரமாக வைத்த சகடம் அசுர ஆவேசத்தாலே ஊர்ந்து வந்து கண்ணனை நலியப்புக, கண்ணன் தன திருவடிகளாலே பாய்ந்து அதனை அழியச் செய்தான. "முலை வரவு தாழ்த்துத் திருவடிகளை நிமிர்த்த மாத்ரத்திலே சகடாசுரன் அழிந்தபடியாலே சாடியது" என்றதாகக் கூறுவர் பெரியவாச்சான்பிள்ளை.

'வேண்டித்தேவரிரக்க வந்து பிறந்த
தும் வீங்கிருள்வாய்
பூண்டு அன்று அன்னை புலம்பப்
போய் அங்கோராய்க்குலம் புக்கதும்
காண்டலின்றி வளர்ந்து கஞ்சனைத்
துஞ்ச வஞ்சஞ் செய்ததும்'
(6-4-5)

என்கிறபடியே கண்ணன் திருவவதாரம் பண்ணினபின்பு கம்சன் அறியாதபடி வளர்ந்து கம்சனை மாய்த்தது வரை செய்த திருவிளையாடல்களை இங்கே அநுபவிக்கப்பெற்றதனக்கு எதிர் இல்லை என்பதாகக் கூறுவர் ஆழ்வார்.

**தேவரிரக்க வந்து பிறந்ததும் ஆய்க்குலம் புக்கதும்:**

தேவர்கள் இரக்க, தன் இச்சையாலே திருப்பாற்கடலில் நின்றும் வந்து கண்ணனாய் அவதரித்தான். அப்போது கண்ணனைப் பெற்றெடுத்த தேவகியார், முன்பே ஆறு பிள்ளைகளை இழக்கையாலும், பிள்ளைமேல் பாசத்தாலும், கம்சனிடம் பயத்தாலும், கண்ணன் திருவடிகளைக் கட்டிக் கொண்டு கதறினாளாகக் கூறுவர். 'மக்களறுவரைக் கல்லிடைமோத விழந்தவள்' என்கிறபடியே பெற்றுப் பெற்று இழந்தவளாகையாலே இவனையும இழக்கிறோமா!' என்று பிரிவாலும் பரிவாலும் கண்ணன் காலைக் கட்டிக் கொண்டு கூப்பிட்டாளாகக் கருதுவர் நம்பிள்ளை. இருள் வளரும் சமயத்தில் கம்சனுக்கு அஞ்சாமல் கண்ணனை மறைத்துவைத்துக் காக்கும்படி ஒப்பற்ற இடைக்குலத்திலே விடச் செய்தாள் இந்நிகழ்ச்சியை, 'வீங்கிருள்வாய் பூண்டு அங்கோர் ஆய்க்குலம் புக்கதும்' என்று அநுபவிப்பர் ஆழ்வார்.

கம்சனைக் கொன்றபோது தேவகியார் பயப்பட்டது போலல்லாமல் இப்போது பயம் கெட்டு ஆழ்வார் அநுபவித்ததாகக்கூறுவர் நம்பிள்ளை.

தேவர் இரக்க வந்து பிறந்த சரிதத்தை முந்துற முன்னம் ஆழ்வார்க்குக் காட்டாதொழிந்தது, ஏனெனில் பிறந்தவாற்றிலே ஆழங்கால்பட்டு ஆறு மாதம் மோகித்தாப்போலே மோகிப்பர் எனற கருத்தினைக் கூறுவர் பிள்ளைலோகம் சீயர்.

**புள்ளைப் பிளந்தது:**

இகல்கொள் புள்ளைப் பிறந்ததும் என்கிறபடியே போரிலே ஒருப்பட்டு வந்த பகாசுரனின் வாயைக்கிழித்துக் கொன்றான் கண்ணன். புள்ளின் எணணத்தைக் கூறும்போது, கேவலம் பறவையாகத் தோன்றுகையன்றிககே அசுர ஆவேசத்தோடு வந்தும் கண்ணனைத் துன்புறுத்தவருகிறது என்று பிறர் அஞசாத வடிவு கொணடு வநதானாம். இதனை 'பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு' என்பர் பெரியாழ்வார்.

**மானிடச் சாதியில் பிறந்தது:**

விரோதிகள் அடியார்களை நலியுமது பொறுக்கமாட்டாமையால் எம்

(33-ம் பக்கம் பார்க்க)



# வினாயகர்

திரு. கி. நாகராஜன
திருக்குணம்.

மகா கணபதியையே முழுமுதற் கடவுளாக வணங்குகின்ற சமயம் காணாபத்யம் எனப்படும். இக் காணாபத்தியம் இப்போது இந்தியா விலேயே மராத்திய மாநிலத்தில் தான் வழக்கத்தில் அதிகமாக உள் ளது எனத் தெரிகிறது.

வினாயகர் என்ற சொல்லுக்குப் பொருள் தனக்குத் தலைவன் இல்லாதவன் என்பதாகும். நாயகன் என் றால் தலைவன். வினாயகன் என றால் தனக்கு மேல் ஒரு தலைவன் இல்லாதவன் என்று பொருள். பெரும்பாலும் ஒரு சொல்லுக்கு முன் னாலே "வி" என்கின்ற எழுத்து வரு கின்ற போது இல்லை என்கின்ற மரு தலைப் பொருளையே அது தரும். மலன் என்றால் குற்றமுள்ளவன் என்று பெயர். விமலன் என்றால குற்றமற்றவன் என்று பொருள். இந்த வினாயகப் பெருமானுடைய தோற்றத்தைப்பற்றிய உண்மையைச் சிறிது பார்ப்போம். எல்லாம் வல்ல சிவ பரம்பொருளுக்கும் உமையம் மைக்கும் சரீர சம்பந்தத்தோடு வினா யகர் பிறந்தாரில்லை. இருவரும் யானை உருபெற்று வினாயகரைப் பெற்றாரில்லை. "ஓம்" என்கின்ற பிரணவ எழுத்து இரண்டாகப் பிரிந்து பின்பு அவை இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து அதிலே இருந்து வினாயகப் பெருமான் தோன்றினார் என்பதுதான் வரலாறு காட்டுகின்ற மிகப்பெரிய உண்மை. வினாயகர் பிறப்பு குறித்து கந்தபுராணம் காட் டுகின்ற கருத்தைச் சிந்தித்தால் இந்த உண்மை விளங்கும்.

கந்தபுராணத்திலே கயமுகன் உற் பத்திப் படலம் தக்ஷகாண்டத்தில் ஒரு பகுதியாகும். கயமுகன் என்ற அசு ரன் தன்னுடைய தவ வலிமையால பல சிறப்புகளைப் பெற்றான். அவன் மாதங்கபுரம் என்ற ஊரைத் தலை நகராகக் கொண்டு நல்லவர்களுக் கெல்லாம் சொல்லில் அடங்காத் துன் பங்களை இழைத்து வந்தான். இந்தி ராதி தேவர்கள் இவனுடைய துய ரைத் தாங்கமாட்டாமல் சிவபெரு மானிடம் சென்று கயமுகனை அழித் துத் தங்களைக் காத்தருள வேண்டு மென்று விண்ணப்பித்தனர். தன் பால் அபயம் என்று வந்த தேவர் களுக்கு சிவபெருமான் அபயமளித்து 'நம் அம்சமாக ஒரு மகன் தோன்றி கயமுகனை அழிப்பன்' என்று கூறி அவர்களை அனுப்பி வைத்தார். பின் உமை அம்பிகையை சிவன் கானகம் காண அழைத்துச் சென்றார்.

அந்தக் கானகத்தில் ஒரு மண்ட பம் இருந்தது. அந்த மண்டபத்தில் பல ஓவியங்கள் இருந்தன. கௌரி அந்த ஓவியங்கள் அனைத்தையும் கண்டாள். ஓம் என்ற எழுத்தும் அதில் இருக்கக்கண்டாள். ஓம் என்ற அந்தப் பிரணவ எழுத்து சிவனரு ளால் பிரிந்து இரண்டாகியது. அதைக்கண்ட உமாமகேஸ்வரி ஓம் என்ற ஒரே எழுத்து இரண்டு கூறுகளாகியதற்குக் கார ணம் என்ன என்று தன் நாயகனைக் கேட்டார். அதற்கு சிவபெருமான் ஓம் என்ற பிரணவக் கூறுகள் இரண் டும் இணைந்ததுதான் மூலமந்திர மான பிரணவமாகும் என்றார். அப் போது அந்த ஓவியத்தில் பிரிந்து காணப்பட்ட எழுத்துக்கள் இரண்டும் மீண்டும் இணைந்தன. அக்கணத்தில் அவ்விடத்தில் முக்கண்ணும் நால் வாயும் மும்மதமும் உடையானை முகத்துடன் ஐங்கரக்கடவுள் ஒரு சிறுவனாய் வந்து தோன்றியருளி னார்.

ஓம் என்கின்ற பிரணவ மூலமந்திர எழுத்து இரண்டாகப் பிரிந்து மீண் டும் ஒன்றாக இணைந்தது. அதிலே யிருந்து வினாயகப்பெருமான் தோன் றினார். அந்த ஓம் ஏன் இரண்டாகப் பிரிந்து பின் ஒன்றாக இணைய வேண்

டும்? ஓம் என்ற பிரணவ எழுத்தின் பலன் இரண்டு. அந்த ஓம் என்ற பிரணவ எழுத்தின் வடிவமாக விளங்கக்கூடிய திருமுகத்தைக்கொண்டிருக்கின்ற விநாயகப்பெருமானை வணங்குவதினாலோ நமக்குக் கிடைக்கின்ற பலன்கள்இரண்டு. ஒன்று நமக்கு உள்ளே கிடைக்கின்றபலன். மற்றொன்று வெளியே கிடைக்கின்ற பலன். நமக்கு உள்ளே கிடைக்கின்ற பலன் ஓஜஸ் என்றும், வெளியே கிடைக்கின்ற பலனுக்குப் பெயர் தேஜஸ் என்றும் கூறப்படுகிறது. அதாவது ஓஜஸ் என்றால் அறிவு ஒளி அல்லது நினைவு ஆற்றல் எனப்படும். தேஜஸ் என்றால் தெய்வ வடிவம். ஆகவே ஓம் என்கின்ற பிரணவ எழுத்து ஓஜஸ் தேஜஸ் என்ற இரண்டு பலனையும் கொடுப்பதால் அந்த ஓம் இரண்டு கூறுகளாகப் பிரிந்து ஒன்றாக இணைந்தது என்பதை "மூலமாம் எழுத்து இவை முயங்கிமால் கரைக் கோலமாய் விநாயகப் பெருமான் தந்தான்" என்று கந்தபுராணம் கூறும் கருத்து மிக அற்புதமானது.

அந்த விநாயகப் பெருமானுடைய உருவம் பல்வேறு மக்களாலே வணங்கப்பட வணங்கப்பட நாளடைவில் பலப்பல வடிவங்களைக் கொண்டதாகவும், பலவித நோககங்களைச் சித்தரிக்கத்தக்கதாகவும், அவரவர்களின் விருப்பப்படியும் அனேக வித வடிவங்களாக உருவெடுத்தன. இப்படி 32 வகையான வடிவங்கள்உள்ளதாகக் கூறப்படுகின்றன. 1. பால கணபதி 2. கருணை கணபதி 3. பக்தி கணபதி 4. வீரகணபதி 5. சக்தி கணபதி 6. துவஜகணபதி 7. சித்தி கணபதி 8. உச்சிஷ்ட கணபதி 9. விக்ன கணபதி 10. க்ஷிப்ர கணபதி 11. ஹேரம்ப கணபதி 12. லக்ஷ்மி கணபதி 13. மகா கணபதி 14. விஜயகணபதி 15. நிருத்த கணபதி 16. ஊர்த்துவ கணபதி 17. ஏகாக்ஷர கணபதி 18. பிரஸன்ன கணபதி 19. துண்டி கணபதி 20. மும்முக கணபதி 21. வர கணபதி 22. நிரய அக்ஷய கணபதி 23. க்ஷிப்ர கணபதி 24. ஹரித்ரா கணபதி 25. ஏகதந்த கணபதி 26. ஸ்ருஷ்டிகணபதி 27. உத்தண்ட கணபதி 28. சிங்க கணபதி 29. யோக கணபதி 30. துர்கா கணபதி 31. சங்கடஹர கணபதி 32. செல்வகணபதி என்பன. இவையன்றி இன்னும் அனேக இடங்களில் அனேக பெயர்களில் விநாயகர் விளங்குகிறார்.



சித்தி விநாயகர் கோயில் - தாரமங்கலம்

விநாயகப் பெருமான் கழுத்து வரை மிருக உடலும் இடுப்புவரை தேவ உடலும், அதன்கீழ் பூத உடலும் அமைந்துள்ளதால் அவர் உயர்திணை அஃறிணை இரண்டிற்கும் பொதுவானவர். ஒற்றைக்கொம்பு உடையவராதலால் ஆண் யானையாகவும், மற்றொரு கொம்பு இன்மையால் பெண் யானையாகவும் அவர் ஆண் பெண் இருபாலாரும் வழிபடப் பொதுவானவராகவும், அவர் கையிலுள்ள பாச அங்குசம், அவர்யானை போல் தோன்றினாலும் யானை அல்ல ஆனால் யானைகளை அடக்கக்கூடியவர் என்பதையும் உணர்த்துகின்றன. விநாயகருடைய முகம் பிரணவ எழுத்து வடிவாய் இருப்பது அவரே மறை, மொழி, முதல் என்னும் உண்மையைக் காட்டுகிறது. அவருடைய கும்பம் ஏந்திய திருக்கரம் ஆக்கும் தொழிலையும், மோதகம் ஏந்திய திருக்கரம் காத்தல் தொழிலையும் அங்குசம் ஏந்திய திருக்கரம் அழித்தல் தொழிலையும் பாசம் ஏந்திய திருக்கரம் மறைத்தல் தொழிலையும், தந்தம் ஏந்திய திருக்கரம் அருளல் தொழிலையும் காட்டுவன. எனவே அவர் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்கின்ற ஐந்தொழிலுக்கும் உடைய நாயகனாக விளங்குகிறார். விநாயகருடைய செவி முறம் போன்றது. அதனால் அவர் சூர்ப்பகர்ணர் எனப்படுவார். பிறவிக் கடலில் விழுந்த நாம் முக்திக் கரை சேர்வதற்குத் தீமைக்காற்றை விலக்கிச் செல்ல அவருடைய காதுகள் உதவுகின்றனவாம். தம்மை வழிபடுவோர் யாராக இருந்தாலும் காரிய சித்தியும் அதைப் பெறுவதற்குரிய புத்தியும் அருளுபவர் ஆதலால் அவர் சித்தி புத்தி என இரு பண்புகளை மனைவியராக உடையவர். அடியார்களின் இடையூற்றை நீக்கும் அவருடைய வல்ல

மையே அவருடையதேவியாகிய வல்ல பையாகும. சித்தியும் புத்தியும் பிரம்மதேவருடைய புதரிகள். வல்லபை மரீசி முனிவரின் புதல்வியாகும். கணபதி உபநிஷத்து அவரையே மும்மூர்த்திகள் எல்றும் பஞ்சபூதங்கள் என்றும் கூறுகின்றன. வினாயகப்பெருமானை வணங்குவதால் எல்லாவிதமான நன்மைகளும் நமக்குக் கிடைக்கின்றன. காரியங்களை மிகச் செம்மையாக முடித்தல் மட்டுமின்றி மிக எளிமையாக ஆன்ம லாபம் பெறுவதற்கும் அவர் அருளே காரணம்.

வண்டுகளுக்குத் தமிழிலே ஆறு கால் என்று ஒரு பெயர். அந்த வண்டுகள் நீணடகாலம் வாழவேண்டுமேயானால் அது யானைகளின் நெற்றியில் ஊறுகின்ற மதநீரை அருந்த வேணடும். வண்டுகளுக்கு ஆறுகால் என்று குறிப்பிட்டது போல யோக சாஸ்திரத்தில் மனிதர்களைக் குறிப்பதற்கும் ஆறு கால் என்றே கூறப்பட்டிருக்கிறது. காரணம் என்ன என்று பார்த்தால் மனிதன் தன் உள்ளே மூலாதாரத்தில் அடங்கிக் கிடக்கும் குண்டலினி சக்தியை கிளப்பிவிட்டு ஆக்ஞையாகிய நெற்றிப் பொட்டுவரை ஏற்றி விடுவதன் காரணமாக யோக சாஸ்திரத்தில் ஒரு மனிதன் முற்றிய ஞானத்தைப் பெறுகிறான் என்று கூறப்படுகிறது. மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அனாகதி, விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு நிலைகளில் குண்டலினி சக்தி ஏறுவதால மனிதனுககும் ஆறு கால் எனறு பெயர் இக்கருத்தை மகாகவி பாரதியார்,

"காலமாம் வனத்தில் அண்டக்
கோலமா மரத்தின் மீது
காளி சக்தி என்று பெயர் கொண்டு
ரீங்காரமிட்டுலவுமொருவண்டு - தழல்
காலும்விழி
நீலவண்ண மூல அத்துவாக்கள்
எனும்
கால்கள் ஆறு உடைய தெனக்கண்டு
மறைகாணும் முனிவோர் உரைத்த ர்
பண்டு"

என்று கூறுகிறார். வேதநூல் அறிந்த முனிவர்கள் யோக சாஸ்திரத்திலே மனிதர்களை ஆறுகால் வண்டு எனறே கருதினர்.

வண்டுகள் நீண்டநாள் வாழ வேண்டுமானால்யானையினுடைய மதநீரை உறிஞ்சிக் குடிக்க வேண்டும் என்று முன்புகுறிப்பிட்டோம். ஆனால் எந்த ஒரு வண்டும் தன்னுடைய நெறறியில் வந்து அமர்நது மதநீரை உறிஞ்சிக் குடிப்பதை எநத ஒரு யானையும் அனுமதிக்காது. யானையை ஒரு கூடத்திலே வலுவான ஒரு தூணிலே கட்டிப்போட வேண்டும. நல்ல வலுவான சங்கிலியால் கட்டப்பட வேண்டும். அதற்கு துதிக்கையை ஆட்டா திருக்கும் வகையில் அரிசி, வெல்லம் போன்றவை போடப்பட வேண்டும். யானை அவற்றை உண்ணும் போது வண்டு மதநீரை அருந்தி வாழலாம். இந்த வண்டைப் போல ஆறுகால் என்று யோக சாஸ்திரத்திலே கூறப்படும் மனிதனும் நீண்டகாலம் வாழ அவனும் ஒரு யானையைத் தேடிச் சென்று அடைய வேண்டும். அந்த யானைதான் மகா கணபதி. இந்த மகா கணபதியாகிய யானையை தன்னுடைய உள்ளம் என்ற கூடத்தில் முயற்சி என்னும் தூணை நட்டு பக்தி என்னும் சங்கிலியால் கட்ட வேண்டும். பந்தபாச மயக்கங்களை அவருக்கு உணவாகத்தரவேண்டும். அதனால் வினாயகப் பெருமான் கருணை என்னும் மதநீரை பொழிவார். நாம் அதை அருந்தி வாழலாம் என்று திருவிளயாடற்புராண ஆசிரியா கூறுகிறார்.

"உள்ளமெனும கூடத்தில ஊக்க
மெனும் தறி நிறுவி உறுதியாக
தள்ளறிய அன்பென்னும் தொடர்
பூட்டி இடைப்படுத்தி
தருகண்பாசக் கள்ளவினை பசு
போதுக்கவளமிட
களித்து உண்டு கருணை எனும்
வெள்ள மதம் பொழி
சித்திவேழததை நினைத்து
வருவினைகள் தீர்ப்பாம்"

இபபடி வேழமாம மகாகணபதியை வழிபட்டு அவருடைய கருணையை பெற்றால் நாம் நீண்டகாலம் வாழலாம்.

மனிதன் என்ன வேணுமானாலும் பெற்றிருக்கலாம். செல்வத்தால், படிப்பால், மனைவி மக்களால் இன்னும் எத்தனையோ விதங்களில் உயர் தரமாக இருககலாம். ஆனால் அவன் பெற்ற செல்வங்கள் அனைத்தும் அவனுக்குப பயன்பட்டு உதவிகரமாக இருக்கவேணும் என்றால் அவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட இறைவனுடைய கருணை அவனுக்கு வேண்டும். தாயுமானவர் பாடுகின்ற போது சொல்வார்: "இறைவா நீ பிரபஞ்சங்களைப் படைத்திருக்கிறாய். அந்த வேதங்களைச் சுட்டிக்காட்டுகின்ற சமயங்களைப் படைத்திருக்கின்றாய். அவை அனைத்திற்கும் பொதுவாய் இருக்கின்ற பொதுக்கருத்துக்களைப்புரிந்து கொள்ளக் கூடிய அறிவைக் கொடுத்திருக்கின்றாய். இவை எல்லாவற்



சாட்சி கணபதி



றையும் கொடுத்து என்ன பயன்? இறைவா! உன்னுடைய அருளைக் கொடுக்காவிட்டால் இவற்றினால் எல்லாம் என்ன பயன்?'' என்கிறார். 'ஐவகம் எனும் பூத ஆசியை வகுத்து. அதனுள் அஜர ஜடபேதமாய் யாவையும் வகுத்து மறை ஆதிநூலையும் வகுத்து சைவம் முதலாம் அளவில்... சமயமும் வளர்த்து அதன் மேல் சமயம் கடந்த மோன சமரசமும் வகுத்துத் தந்த நீ! நான் உன்னை அடையத் தண்ணருள் வகுக்கவில்லையே'' என்றார். ஆகவே அவர் திருவருள் மிக மிக முக்கியமாகும்.

அப்படி அவருடைய திருவருளைப் பெற நாம் அவருடைய திருவடிகளைப் பற்றித்தான் ஆகவேண்டும். அதன்படி யானை வடிவில் உள்ள வினாயகரின் திருவடிகளைப் பற்றுவதில் யானைககும் அவருக்கும் ஒரு ஒற்றுமையைப் பார்க்க வேண்டும். யானையின் மீது ஏறி அமரவேண்டும் என்று யார் விரும்பினாலும் ஒரே ஒரு வழிதான் உணடு. யானையின் காலைப் பற்றிக் கொண்டால் மட்டும் தான் அதன் மேல் ஏறி அமர முடியும். யானையின் காலைப் பிடித்தால் அது கொஞ்சம் வளைந்து கொடுக்கும். அதன் மேல் ஏறிக் கொள்ளலாம். அப்படி என்றால் யானை தன்னுடைய பாதங்களை யார் பிடிக்கின்றார்களோ அவர்களைத் தன்தலைக்கு மேலாகத் தூக்கி விடுவது அதன் இயல்பு என்பது விளங்க வினாயகப் பெருமானும் தன் திருவடிகளை யார் பற்றுகிறார்களோ அவர்களை வாழ்விலே தலைக்கு மேலாக தூக்கி விடுவான் என்பதை உணாத்துவதற்காகவே வினாயகப் பெருமான் யானை வடிவிலே இருக்கிறார்.

வினாயகப் பெருமானின் திருஉருவத்திலே மிக ஆழமாக சிந்திக்கவேண்டிய கருத்து ஒன்று உண்டு. அவருடைய முகத்தோற்றம் யானையினுடைய முகத்தோற்றத்தோடு அமைந்திருக்கிறது. அதாவது ஓம் என்கின்ற பிரணவ எழுத்தின் வடிவமாக இருக்கிறது. வினாயகப் பெருமானுடைய வலது பக்கத்து காதிலே இருந்து தொடங்கி அவருடைய இடது பக்கத்து காது வரை வந்து துதிக்கையிலே இறக்கி கொழுக்கட்டையில் முடித்தால் ஓம் என்ற பிரணவ எழுத்தை நம்மால் உணரமுடியும். ஆகவே அறிவு இருக்கின்ற தலைப் பகுதியில் வினாயகப் பெருமானுக்கு ஓம் என்னும் பிரணவ எழுத்து அமைந்திருக்கிறது. அந்த ஓம் என்பது நினைவாற்றலையும் தெய்வ வடிவத்தையும் தரும் என்பதையும் கண்டோம். அந்த ஓம் மூன்று எழுத்துக்களின் கூட்டு ஆகும். அவை அ+உ+ம் என்பதாகும். இவற்றில் நடுநாயகமாக உள்ள "உ" என்பதே மூலமாகவிளங்குகிறது. அதைத்தான் நாம் வாழையடி வாழையாக பிள்ளையார் சுழி என்று பயன்படுத்துகிறோம். மூலத்திற்கு மூலமாய் விளங்குவது என்பது அ[illegible]ாருள்.

வினாயகப் பெருமானின் அறிவு இருக்கின்ற தலைப்பகுதி முதிர்ந்த ஞானத்தைச் சுட்டிக் காட்டுகின்ற ஓம் என்னும் பிரணவ வடிவத்தில் இருக்கிறது. இதயம் இருக்கின்ற மார்பு பகுதியோ குழந்தை போன்ற பகுதியாக இருக்கின்றது. அறிவு முதிர்ந்த ஞானத்தைக் காட்டும் பிரணவ வடிவத்திலும், இதயம் குழந்தை வடிவத்திலும் இருப்ப

(35-ம் பக்கம் பார்க்க)

# ஆடிப் பூரத்தில் ஆண்டாள்

“ஆடிப்பூ ரத்தில் அவதரித்த ஆண்டாள்தாம்
நாடியே கண்ணபிரான் நற்றிறத்தைப்—பாடியே
இன்புற்றார் இப்புவியோ ஏற்றமுறப் பாவையினால்
சொன்மாரி பெய்தார் சுடர்ந்து!”

இவ்வெண்பாவில் கவியமுதனார் ஆடிப்பூர நட்சத்திரத்தில் தோன்றிய ஆண்டாள் அன்னையாரை அகம் குழைந்து புகழ்கின்றார். ஆண்டாள் கண்ண பெருமான் நாட்டத்தில் ஆட்பட்டவர்; அப்பெருமாயனின் நற்றிறத்தையெல்லாம் பற்றுடன் பாடிப் போற்றியவர்; பாடிய திருப்பாவையைப் பயனுற, இப்புவியோர் ஏற்றமுற இனிய சொற்களைக் கொண்டு மழை பொழிவதைப்போல் அருளினார்; அருளியவர் பெருமையுறச் சுடர்ந்து நின்றவர் என்று அவரை உவப்புடன் போற்றுகின்றார் கவியமுதனார்.

நாட்டிற்கும் மக்களுக்கும் நல்வழி காட்டிட வந்தவர்கள் மாட்சியுறும் வகையில் ஒரு நல்ல நாளில் தோன்றியுள்ளார்கள். செய்த அறப்பணியால் சிறந்த அவர்கள், மக்கள் மனங்களில் தக்கவராக இலங்குகின்றார்கள். இத்தகைய சத்திய சீலர்களைப் போற்றும் மக்கள், இவர்கள் பிறந்த நாளுக்கும் பெருமை செய்கின்றார்கள.

திருவள்ளுவர் முதலான பெருமக்கள் திறத்தை எண்ணிப் போற்றும் மக்கள், அவர்கள் பிறந்த நாளை நினைவில் வைத்துப் போற்றி வருவதால், அந்நாளில் அப்பெரு மக்கள் போற்றுதலுக்குரியராகின்றார். சான்றோர்களைப் போற்றும்போது அவர்கள் தோன்றிய நாளும் போற்றுதற்குரியதாகின்றது. மலருடன் சேர்ந்த நாரும் மணம் வீசுவதைப் போன்று, புகழ்பெறும் சான்றோர்களால் அவர்கள் பிறந்த நாளும் புகழ்வதற்குரியதாகின்றது.

இவ்வாறு சான்றாண்மை பெற்ற ஆண்டாள் ஏற்றம் பெற்றதால், அவர் நம் போற்றுதலுக்குரியராகின்றார். அவரை நா ) போற்றும் போது அவர் பிறந்த ஆடிப்பூர நட்சத்திரத்தில் வரும் நாளையும் நாவாரப் போற்றியே வருகின்றோம். ஆடிப்பூர நட்சத்திரத்தை எண்ணும் போதுதான் ஆண்டாள் அன்னையாருக்கு ,ராம் விழாவெடுத்துப் போற்றுகின்றோம். ஆண்டாள் அன்னையாரால் ஆடிப்பூரம் நாம் வழிபடும் நாளாக அமைகின்றது.



ஆடிப்பூர நட்சத்திரத்தில் வான வீதியில், வட்ட நிலா பொலிவு காட்டி நின்ற நேரத்தில், ஞானத் தமிழ் மண்ணிலே, வேதகான இசை மழை பொழியும் கவின்மிகுந்த திருவில்லிபுத்தூரில் தெய்வப் பெண்நிலவாய் ஆண்டாள் அருள் மழையைப் பொழியப் பிறந்தார்.

செந்தமிழ்ப் பாவலர்கள் சிந்தை மகிழ்ந்து போற்றுதற்குரியராகத் தோன்றினார். பாவலர்கள் வியந்து போற்றும் பாவலராக, பக்தர்கள் புகழ்ந்து போற்றும் மிக்காராக மிளிர்ந்தார். மக்கள் நாவினில் தக்காராக விளங்கிய அவர்தம் புகழால் ஆடிப்பூர நட்சத்திரம் அருமைக்குரியதாக ஆனது.

ஆண்டாள் தோன்றிய ஆடிப்பூரத்தில் வேண்டிய பேர்கள் தோன்றி

கவிஞர். வி மு. உலகநாதன்,
சென்னை-112.

யிருக்கக் கூடும். அவர்கள் எல்லாரும் நம் நினைவுக்கு வந்து போற்றுதற் குரியராக ஆகாமல் போனது ஏன்? தம்மை நெறிப்படுத்திக் கொள்ளாமலும், நாடு, மக்கள் என்கின்ற நோக்கில் நின்று தொண்டாற்றாமலும், பரம்பொருள் பக்தியில் ஆழங்கால் படாமலும், காலத்தை வீணடித்து வாழ்ந்ததால், தாழ்வடைந்த அவர்கள் மக்கள் நினைவுக்கு வாராமலேயே மறைந்தார்கள்.

ஆனால் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்பு தோன்றிய ஆண்டாள் அன்னையார் இன்றும் நம் நினைவில் நின்று போற்றுதற்குரியராக இருப்பதற்கு, அருளாளன்பற்றில் ஆழங்கால் பட்டும் மக்களுக்கு நல்வழி காட்டியும் உலகம உய்ய உயர்ந்த இலக்கியமான திருப்பாவையை அருளியும தொண்டாற்றியதாலேயாகும்.

இத்தகைய இனிய பண்பாளரைப் போற்றும்போது அவர் பிறந்த நாள் சிறந்ததாக நம் போற்றுதலைப் பெறுகின்றது. இவ்வாறு போற்றுதலுக் குரியரான அவரையும் அவர் பிறந்த ஆடிப்பூரத்தையும் பலர் பாடிப் புகழ்ந்துள்ளனர். இந்நிலையில் சிந்தை மகிழ்வு கொண்டு அப்பிள்ளை என்னும் திருமால் அடியார்,

"திருவாடிப் பூரத்துச் செகத்துதித்த
தாள் வாழியே"

என்றார். இதில் இம்மண்ணில் நன்மை தோன்ற வந்துதித்த ஆண்டாளையும் அவர் பிறந்த ஆடிப் பூரத்தையும் புகழ்கின்றார். முதலில் அவர் ஆடிப் பூரத்தைப் போற்றிய பின்னரே ஆண்டாளைச் 'செகத்துதித் தாள் வாழியே' என்று போற்றுகின்றார். அருளாளனைவிட அடியாருக்கு முதன்மை தருவது வைணவ சித்தாந்தம். அந்த வகையில் மனித குலத்தினை உய்விக்க வந்த ஆண்டாளைவிட அவர் பிறந்த ஆடிப் பூரத்திற்கு முதன்மை தரவே இவ்வாறு பாடினார் போலும்!

அப்பிள்ளை அவர்கள் மேற் குறித்த அடியைத் தொடக்கமாக வைத்துப் பாடிய பாடலில், ஆண்டாளின் மாண்பையெல்லாம் பலபடப் பேசுகின்றார். அவர்தம் பெற்றியினை அற்புதமாக எடுத்துக்காட்டிப் புகழ்கின்றார் அவர்.

முதலடிக்குப் பின்வரும் அடிகளில், வேதமனைத்திற்கும் வித்தாகும திருப்பாவை முப்பது பாசுரங்களைப் படைத்தவரென்றும், நாளும் பொழுதும் சஞ்சலம் தீர்க்கும் தயாபரனுக்குத் தொண்டு செய்த விட்டுசித்தருக்கு மனம் உகப்பூட்டும் மகளாகக் கிட்டப் பெற்றவர் என்றும், தாம் விரும்பிய பணியை நிறைவு செய்ய இராமானுசருக்குப் பின்னின்று உணத்தியவர் என்றும், ஏற்றமுடைய நூற்று நாற்பத்து மூன்று நாச்சியார் திருமொழியை அருளியவர் என்றும், அழகுடைய திருமல்லி அருள் நாடி வந்தவரென்றும், குணமுடைய மனம் கொண்ட சான்றோர்கள் வதியும் பதியான திருவில்லிபுத்தூர் நகர் தன்னில் வந்துதித்தவர் என்றும் கூறி, ஆண்டாள் அன்னையார் மாண்பார் மலர்ப்பதங்களை வணங்கி வாழ்த்தினார்.

வாழ்த்திய அப்பிள்ளை, ஆண்டாளை நாம் வேண்டி நிதம் போற்ற, ஆடிப்பூரத் திருநட்சத்திரத்தில் அருள் விளங்க விழாவெடுத்துப் புகழ வழி கூறுகின்றார். அவர் மேற் குறித்த செய்திகளையெல்லாம் வைத்து,

"திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள்
வாழியே!
திருப்பாவை முப்பதும் செப்பினாள்
வாழியே!
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்
பிள்ளை வாழியே!
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னா
னாள் வாழியே!
ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்
தாள் வாழியே!
உயரரங்கர்க கண்ணி உகந்தளித்தாள்
வாழியே!
மருவாரும் திருமல்லி வளநாடி
வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்
பதங்கள் வாழியே!"

என்று வாழித்திருநாமம் பாடி மனம் உவந்து போற்றுகின்றார். இப்பெரியாரைப் போன்று இனிது பாராட்டுகின்றார் மணவாள மாமுனிகள். திருவாடிப் பூரம் என்னும் திருநாள் எமக்காகத் தோன்றியது என்கின்றார். ஆண்டாள் அன்னையாரை நினைந்து மனம் உவந்து போற்ற அந்த ஆடிப்பூர அருமை நாள் எமக்காக வந்தது என்றார். ஆடிப்பூரத்தில் ஆண்டாள் அவதரித்ததால், இத தாரணி ஏற்றம் பெற்று மெத்தவே உயர்ந்தது; பரமபத வாழ்வான வைகுந்தம் தாழ்ந்தது என்று கூறுகிறார்

"இன்றோ திருவாடிப் பூரம் எமக்காக
அன்றோஇங்(கு) ஆண்டாள் அவ
தரித்தாள்—குன்றாத
வாழ்வான வைகுந்தம் வான்போகம்
தன்னையிகழ்ந்(து)
ஆழ்வார் திருமகளா ராய்"

எனப்பாடியதில், 'குறைவின்றி விளங்கும் வான்போக வைகுந்தம் ஆண்டாள் தோன்றியதால் குன்றியது; மண்ணுலகம் மிக ஓங்கி நின்றது' என்று தெளிவுபடுத்துகின்றார். ஆண்டாள் தோன்றிய போதே அருள்ஒளி விளங்கத் தோன்றினார். துளசி தோன்றும் போதே உளம் கவரும் மணத்தோடு தோன்றுதல் போன்று, இவரும் அருளாளன் திருவருள் ஒளி வீசத் தோன்றி, மக்கள் மனத்தைக் கவர்ந்தார். அவர் இந்த அவனியில் புகழ் பெற்றதைப் போல் அவர் பிறந்த நாளும் சிறப்புப் பெறுகின்றது. ஆண்டாள் அன்னையாருக்கு உவமை காட்ட இயலுமென்றால் ஆடிப்பூரத் திருநட்சத்திரத்திற்கும்

உவமை காட்ட இயலும் ஆனால் ஆண்டாளுக்கு உவமை காட்ட இயலாத போது ஆடிப் பூரத்திற்கும் உவமை காட்ட இயலாது என்று அறுதியிட்டுக்கூறும் மாணவாள மாமுனிகள்,

"பெரியாழவார் பெண்பிள்ளை ஆண்
டாள் பிறந்த
திருவடிப பூரத்தின் சீர்மை—ஒரு
நாளைக்(கு)
உண்டோ மனமே உணர்ந்துபார்
ஆண்டாளுக்(கு)
உண்டாகில் ஒப்பிதற்கும உண்டு"

என்று பாடுகின்றார். வெணபாப் பாடுவதில் தன்னேரில்லாதவர் மணவாள மாமுனிகள். அருளாளனைக் காட்டிலும் அடியாருக்கு ஏற்றம் கூறும் நெறியில் இவ்வெண்பாவில் ஆண்டாளைக காட்டிலும் ஆடிப் பூரத்திறகுப் பெருமை கூறுகின்றார் இவர். இராமபிரானைப் புகழ வந்தவர்,

"மன்னுபுகழ் கோசலைதன் மணி
வயிறு வாய்த்தவனே",

என்று பாடுவதில் இராமபிரானைத் தம் மணி வயிறு விளங்கப் பெற்ற கோசலைப் பிராட்டியாரின் சிறந்த புகழைப் பெருமையாகப் பேசுவதைப் போல, ஆண்டாள் பிறந்த டிப் பூரத்தை அருமையாக எடுத்துப் பேசுகின்றார் மணவாள மாமுனிகள். முதற் கூறிய வெண்பாவில், "ஆழ்வார் திருமகளாராய்" என்றவர், இவ்வெண்பாவின் தொடக்கத்திலேயே, "பெரியாழ்வார் பெண பிள்ளை ஆண்டாள" என்று கூறியதில் பெரியாழ்வாருக்குப் பெண் பிளளையாகத்தோன்றியதாலே ஆண டாள் அருள் உணாவைப் பெற்றுப் பெருமையுற்றார் என்று பெரியாழ் வாருக்கு நன்றி கூறும் வகையில் நாவாரப் புகழ்கின்றார். ஆடிப் பூரம் ஆண்டாள் பிறந்ததால் நாடறியப் பெருமையுறுகின்றது. ஆண்டாளை தாம் வேண்டிக் கோடிக்கும் நாளாக அது விளங்கி நிற்கிறது.

பிரபந்த சாரம் பாடிய ஆசிரியர் பெருமை சான்ற ஆண்டாளின் பக்தராக விளங்குகின்றார். அவர் ஆண டாள் அன்னையாரின் பெயரைக குறிக்காமல் பாடியதில் வேயர் குலத்தையும் வில்லிபுத்தூரையும் ஆடிப் பூரத் திருநட்சத்திரத்தையும் புகழ்ந்து அவை மேன்மேலும் மிக விளங்கவும், விட்டுசித்தர் தூயநெறி நிலைக்கவும், அவருக்கு மகளாக வந்தவர் அரங்கனுக்குத் துழாய் மாலையைத் தாம சூடிக் கொடுத்தும், திருப்பாவை முப்பது பாசுரங்களையும் நாச்சியார் திருமொழி நூற்றுநாற் பத்து மூன்று பாசுரங்களையும் சிந்தைக்கினிய எம்பெருமானுக்குத் தந்தும் ஆகிய சிறந்தவரிடம் அவற்றை அன்புடனே அடியவனான எனக்கு அருளசெய் என்றும் வேண்டுகின்றார். இந்தக் கருத்தை,

"வேயர்புகழ் வில்லிபுத்தூர் ஆடிப்பூரம்
மேன்மேலும் மிகவிளங்க விட்டு
சித்தன்
தூயதிரு மகளாய்வந் தரங்க
னார்க்குத்
துழாய்மாலை முடிசூடிக்
கொடுத்த மாதே
நேயமுடன் திருப்பாவை பாட்டா
றைந்து
நீயுரைத்த தையொருதிங் கட்பா
மாலை
ஆயபுகழ் நூற்றுநாற் பத்து மூன்றும்
அனபுடனே அடியேனுக் கருள
செய் நீயே!"

என்று பாடுவதில் மேற்குறித்தவற்றையெல்லாம் ஆண்டாள் அன்னையாரே வந்து தமக்கு அருள் செய்ய வேணடுமென்று மனமுருகி வேண்டுகின்றார் அவர். அப்பிள்ளை அவர்களை போன்று இவரும் ஆண் டாளையும் ஆடிப்பூரத்தையும் அருமையாகப் பாடிப் புகழ்கின்றார்.

உலகம நலம்பெற நிலையான வாழ்வைப் பாடிய பெரு மக்கள் தாம அருளிச் செயலான படைப் பால புகழ்பெற்று இனறளவும் நாம் பாராட்டும் அளவில் இருக்கின்றார் கள். இறவாத தொண்டால், நாம் அவர்களை மறவாத நிலையில் இங்கே புகழாய் வாழ்கின்றார்கள். அவர்களைத் திருவள்ளுவர்,

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப்படும்"

என்றார். இதில் தக்கார் என்பவரைப் புகழுக்குரிய தொண்டினை ஆற்றியவர் எனக் கூறுகின்றார்; தகவிலரை இகழ்ச்சிக்குரிய செயலைச் செய்தவர் எனக கூறுகின்றார். இவர்கள் செயலே எச்சமாக நின்று இவர்களைப் படம் பிடித்துக் காட்டும் என்றார் அவர். இவர் குறளால் புகழ்ச் செயலைப் புரிந்து பொலிந்து நிற்பவர் ஆண்டாள் என அறிகின்றோம். அவர் புகழேணியில் நிற்கும் அளவில் திருப்பாவை, நாச்சியார் திருமொழியாகிய இரு பிரபந்தங்களை அருளி ஆடிப்பூர நட்சத்திரத்தில் நாம் போற்றித் துதிக்கும் வகையில் உள்ளார். மக்களும் மன்பதையும் எக்காலும் போற்ற தக்காராக விளங்குகின்றார். எனவே அவரை,

"வாடிய பயிாக்கு மழையேபோல்
மக்களுய்ய
ஆடிப்பூ ரத்தில்நம் ஆண்டாளே—
நாடி வந்தார்
பணபால்தேன் பாசுரங்கள பாடினார்
நம நெஞ்சகம்பால்
ஒண்டமிழ்போல் நின்றார் உயர்ந்து."

என்று கவியமுதனார் கூறுவதைப் போல வாடிய பயிருக்கு மழை நலம விளைவிப்பதைப் போனறு மக்களுக்கு மிகுநலம்-தெய்வ நலம் ஏற்படுத்தவே ஆண்டாள் தோன்றினார். அவரை ஆடிப்பூரத்திலும் எல்லா நாள்களிலும் வழிபடுவோமாக!

★

# ஆண்டாள் அருளமுதம்

நாச்சியார் திருமொழிகள்.

வைணவத் திருப்புலவர்களில் முக்தியருளும் ஆண்டவனையும் பக்தி பெருக்கும் அடியோரையும் ஆட்கொண்டு என்றும் நீங்கா இடம் பெற்றவர் ஆண்டாள். பெரியாழ்வார் பேணி வளர்த்த பெண் பிள்ளை. இவர்தம் தெய்வக் கவிகள் பக்தி வைராக்கியம் எனும் உயிர் இழையோடப் பெற்றவை. பாடுவோரையும் கேட்போரையும் காதலாகிக் கசிந்து, கண்ணீர் மல்கச் செய்யும் ஈர்ப்புப் பொதிந்தவை. மனம், மொழி, மெய் கட்கு எட்டாதவன் என்று ஆன்றோர்களால் பேசப்படும் ஈசனை, சாதாரண மனித நிலைக்குக் கொண்டு வநது, சம வயதுடைய நெருங்கிய தோழனாக அண்மைப்படுத்தும் ஆற்றலையும் இறைவனிடம் இரண்டறக் கலத்தல் இயலும் என்ற திட நம்பிக்கையையும், பூமகள் கொழுநன் பூரிப் படைந்திடப் பூமாலை சூடிக் கொடுத்திட்ட பூவையிவர் பாடலில் காணுதல் இயலும். இவர்தம் திருப்பாடல்கள் உலகியல் உணர்வோடும் வாழ்வியல் நிகழ்ச்சிகளோடும் பிணைந்தவை.

காதலுறவு.

மனித வாழ்வில் அமைகின்ற உறவுகளில் மிக நெருக்கமும் எவ்வித ஒளிவு மறைவு இன்மையும் ஈருடல் ஒருயிர் என்ற நிலையில் இரண்டறக் கலத்தலும் பெற்றமைவது காதலன்–காதலி எனும் உறவு ஒன்றேயாகும். இத்தகைய உறவில் காதலன், காதலி எனும் இருவரும் நெருங்கி உறவாடிய நிலையில் ஒருவரே எனும் ஒருமையுணர்வினை, உணர்வு நிலையிலும் வாழ்வியல் நிலையிலும் எய்துகின்றனர். இத்தகைய வேற்றுமையினை ஒருமையாக்கிடும் உறவு நிலையினைத் தமிழ்த் தெய்வக் கவிஞர்கள்

டாக்டர். பெ. சுயம்பு,
திருச்செந்தூர்.

ஆன்மீக வாழ்வினை விளக்குவதற்கு ஓர் உத்தியாகக் கையாண்டுள்ளனர். பக்தி இயக்கக் காலத்தைய இக்கவிஞர் பெருமக்களுள்ளும் ஆண்டாள் நாச்சியாரின் திருப்பாடல்களே மிகவும் மேம்பட்ட உணர்ச்சிமயமான காதலைப் புலப்படுத்தும் வகையில் விளங்குகின்றன.

மனவுறுதி:

கண்ணபிரான்பால் குழவிப் பருவத்திலிருந்தே தீராக்காதல் கொண்டவர் நாச்சியார். பெருமானேயல்லால் வேறொரு மானிடனுக்கு மனையாள் ஆகேன் என்று வைராக்கியம் எய்தப் பெற்றவர். அறியாப் பருவத்து இந்த மனவுறுதி, தம் தந்தையார் பட்டர்பிரான்பால் செவியுற்ற பெருமானின் பெருமையாலும், முந்தைப் பிறவியின் தொடர்ச்சியாலும் காத



ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீவேங்கடேஸ்வரர் - திருமலை.

லர்க மாறுகிறது. ('ஒன்றே வேறே என்றிரு பால்வயின், ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' எனும் தொல் காப்பியரின் விதி, கோதையாரின் காதலுக்கும் ஆதியாகிறதுபோலும்!')

'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம்
ஆட்செய்வோம்'
(திருப்பாவை)

'மானிடவர்க்கு என்று பேச்சுப்படில்
வாழகில்லேன்'

'கண்ணாலங் கோடி த்துக் கன்னி
தனைக் கைப்பிடிப்பான்'

'கொள்ளும் பயனொன் றில்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டவன் மார்வி
லெறிந்து என்னழலைத் தீர்வேனே'
(திருமொழி)

கண்ணபிரான்பால் கொண்ட காதலின் உறுதி, எத்தனைப் பிறவி எடுப்பினும் தானே மனைவியாக அமைவேன்என்றும் அக்காதலன் உறுதியாக தன் கைத்தலம் பற்றிக் கலியாணம் புரிவான் என்றும் திடமான நம்பிக்கையை அளித்துளது. இந்நம்பிக்கை பொய்க்குமேல் தான் உயிர் துறத்தற்கும், காமப் பயனைத் துய்த்தற்கும், உணர்ச்சியைத் தோற்றுவித்தற்கும்ஆதாரமான உறுப்பினைச்சிதைத்தற்கும் காதலிக்கு வலிமை அதனால் ஏற்படுகிறது. சாதாரண தமிழ் மகள் ஒருத்தியின் காதல் வைராக்கியம் இங்கு நாச்சியாரின் மொழி வழிப் புலப்படுகின்றது.

காதலன்பால் முழு நம்பிக்கையுற்ற காதலி, 'கதியென்றும் தானாவான்' என்று முழுமையாக அவனைத் தஞ்சமடைவாள். நேரிய மனமொத்த, விதி வழி வநத காதலனும் அவளைக் கைப்பிடிப்பான். இறைவனாகிய காதலனும் தன்னை முழுமையாக நம்பி, உறுதியாகப்பற்றித் தஞ்சம் புகும் அன்பராகிய காதலியரைக் கைவிடுதல் இலன். யார் என்னைச் சரணடைகிறார்களோ அவர்களே



என் மாயையைக் கடந்து என்னை அடைவர் என்று பகவான் கீதையில் திருவாய் மலர்ந்தருளுதல் இவண் நினைத்தற்குரியது.

புண்ணில் புளி.

காதல் நெறியைப் பக்தியில் படர விட்ட நாச்சியார் அதனைச் செவ்வனே முழுமையாக நிறைவேற்றியுளார். கண்டு, உறவாடி, மனங் கலந்து, ஒருவழித் தணந்த காதலன் வரும் பொழுது தவறியதால் காதலி மனம் நொந்து, காமத்தீயில் வெந்து கனலுகிறாள். அவள் மாட்டுள்ள பெண்டிர் புறம்பேசி, அலர் தூற்றுகின்றனர். வெந்த புண்ணில் புளியைப் பெய்தது போலத் துயரூட்டும் இந்த வெறும் பேச்சினையொழித்து குளிரூட்டச் சற்று விசிறினால் இத மாயிக்குமன்றோ! மங்கை நல்லாள் வேண்டுகின்றாள்.

கண்ணன் என்னும் கருந்தெய்வம்
காட்சி பழகிக் கிடப்பேனை
புண்ணிற் புளிப்பெய்தாற்போலப் புற
நின்று அழகு பேசாதே
பெண்ணின் வருத்தம் அறியாத
பெருமான் அரையில் பீதக
வண்ணவாடை கொண்டு என்னை
வாட்டம் தணிய வீசிரே.
(திருமொழி)

விசிருகின்ற ஆடை பெருமானின் உடலைத் தழுவிய பீதாம்பரமாக இருந்தால் எளிதில் குளிருமென எண்ணுகிறாள். காதலனின் பொருள்

எதுவும் கிடைக்கப்பெற்றால் அதுவே அவன் நினைவால் பேரின்பமூட்டும் எனும் மனவியல்பு இங்கு வெளிப்படுகிறது இவ்வாறே அவனணியும் துழாய், அடிப்பொடி, இதழூறும் நீர் போல்வனவற்றைத் தன் உடலில் பூசுமாறு வேண்டுகிறாள்.

**யானையுண்ட விளங்கனி :**

காம நோய் மிகுதியால் தலைவியின் வசமிருந்த 'ஒளி, வண்ணம், வளை, சிந்தை, உறக்கத்தொடு இவையெல்லாம் போயின'. உணவு செல்லவில்லை. உணர்வும் வசம் நில்லாததாய்ற்று. அதனால் 'நாணியினியோர் கருமமில்லை' என்ற மன நிலையை எய்துகிறாள். பெண்மைக்கே உரிய நாணு வரையிறக்கிறது. அவள் காணபவை எல்லாம் காதலனோடு உறவுடையனவாகத்தோற்றமளிக்கின்றன. பார்க்குமிடங்களிலும் பொருளிலும் நந்தலாலா தோற்றமளிக்கின்றான். கருவிளை ஒண்மலர்கள், காயா மலர்கள் குயில்கள், மயில்கள், முகில்கள், இளங்கனிகள்போல்வனயாவும் திருமாலுருவொளி காட்டுகின்றன. இதனால் கிளர்ச்சியுற்ற தலைவி, அவற்றிடம் தனக்கு உதவுமாறு வேண்டுகிறாள்; தூது செல்லத் தூண்டுகின்றாள். இது ஒரு புறமிருக்க, காமத்தை மிகுவிக்கும் இளவேனிலும் கார்காலமும வநதமைகின்றபோது, அவ்வப்போது விளையும் பொருள்களை நோக்குகிறாள். அதனால் தலைவன் நினைவு மிகுகிறது. இயற்கையின் செயல் தலைவியை எள்ளி நகையாடுவதுபோலத்தோனறுகிறது.

'கார்க்கோடல் பூக்காள் கார்க்கடல்
வண்ணான் என் மேல் உம்மைப்
போர்க்கோலம் செய்து பொரவிடுத்து
அவன் எங்குற்றான்?'
'கோவை மணாட்டி நீயுன் கொழுங்
கனிகொண்டு எம்மை
ஆவிதொலைவியேல்'
'முல்லைப் பிராட்டி நீயுன் முறுவல
கள் கொண்டு எம்மை
அல்லல் விளைவியேல்'
'பாடுங்குயில்காள் ஈதெனன பாடல்
நல் வேங்கட
நாடர் நமக்கொரு வாழ்வு தந்தால்
வந்து பாடுமின்'
(திருமொழி)

தம் மனக்கினிய காதலன் வரக் காணாமையினால், 'வணணம் திரிவும் மனங்குழைவும், மானமிலாமையும் வாய்வெளுப்பும்உண்ணலுறாமையும் உள்மெலிவும்' உற்று, யானையுண்ட விளங்கனியாகத் தோற்றமளிக்கிறாள் காதலி. எனவே கரிய கோடல் மலரும், செவ்விய கோவைக் கனியும், முல்லை மலரும் கண்ணனை நினைவூட்டி, தம் அழகிய செவ்விதழ் பொலிவிழநது வெளிறியதையும் புன் முறுவல் முகம் இழந்ததையும் குத்திக் காட்டுவதாக உள்மனம் சுடுகிறது. எனது காதலன் வந்து நல்வாழ்வு தருவதாக இருந்தால் என்னெதிரில் பாடுங்கள்; அன்றேல் ஓடுங்கள் என்று வெதும்புகிறாள். பருவம் கண்டு மனம அழிதல் என்பது தமிழிலக்கியக் காதலில் பயிலும் ஒரு மரபு.



காளியமர்த்தனம் - நகச்சித்திரம்.



ஸ்ரீ வித்யா ராஜகோபாலன்
ராஜமன்னார்க்குடி - சன்மீஷடை.

**கருப்பூரம் நாறுமோ**

காதலனைக்கணடு, மனம் மகிழ்நது புணர்சசியில் அமிழத் துடிககும் இவ்வுளப்பாஙகு, எம்பிரான் இடக்கைப் பற்றித் திருவாயால் ஊதப்படும சங்கை விளிதது, நாசசியார் பாடும் ஏழாம திருமொழியில அனுபவ நிலை ஓர் ஏக்க உணர்வில் நனகு தொனிக்கிறது.

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ
நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான தித்தித்
திருக்குமோ

மருப்பொசித்த மாதவன்றன் வாயச்
சுவையும நாற்றமும்
விருப்புறுக் கேடகிறேன் சொல் ஆழி
வெண் சங்கே
(திருமொழி)

'வெணசங்கே! நான் மிக வேட்கை யோடு கேட்கிறேன், மாதவன் வாய்ச் சுவையும் நாற்றமும் எத்தன்மைத்தோ? எத்துணை ஏக்கம் கலந்த வினா இது! இறைவனின் துணைவிமார் யார்கரும் கிடைத்திருக்காத பேரளவு இத்தகு இன்பம் அவன் கை வலம்புரி ஒன்றற்கே கிடைக்கப் பெற்றுளது. எனவே, தக்கதை நாடித் தலைவி வினவுகிறாள்.

*கூடலிழைத்தல்*

மனக்கிளர்ச்சியும் ஏக்கமும் தணியாக் காமநோயும் பிடிக்கப்பெற்ற இம்மங்கை, தலைவன் விரைந்து வரப்பெறுவானா என்பதை அறிய, மணலில் கூடலிழைத்துப் பார்க்கிறாள்.

காட்டில் வேங்கடம் கண்ணபுரநகர்
வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஒட்டரா வந்து என்கைப் பற்றித்
தன்னொடும் கூட்டுமாகில் நி கூடிடு
கூடலே
(திருமொழி)

*காமன் நோன்பு*

கன்னியர் தம் மனங்கவர்ந்த காதலனைக் கைப்பிடித்துக் கடைத்தேறும் எண்ணம் இனிது நிறைவுற அம்பிகையையும் காமதேவனையும் நினைந்து, பூசித்து, விரதமிருந்து நோற்கும் வழக்கம் உண்டு. இவ்வழக்கு நாச்சியார் திருப்பாடல்களில் சிறப்புற விளங்குகிறது.

காமத்தீயுள் கதுவப்பட்டு, கண்ணீர்கள் முலைக்குவட்டில் சோர்ந்து வழிய, மாமிதன் மகனைக் கைப்பிடிக்கும் சிந்தை நிறைவேறத் தலைவி நம் நாச்சியார் காமனை நோக்கி நோன்பிருக்கிறாள். தன்னை வருத்தும் காமதேவனையே சரணடைகிறாள். அவன் இரக்கம் பெற்று, தன்பால் தலைவனைக் கூட்டுவித்து, நோய்க்குமருந்தும் அருளுவானென்ற சிந்தை இது. சாபம் தருவோரே சாப விலக்கும் தருவதைப்போல, காம நோயைத் தரும் மன்மதனே அதற்குக் கழுவாயினையும் அருளுவான்.

காமன் போதரு காலமென்று பங்குனிநாள் கடைபாரிக்கிறாள் தலைவி. இளவேனில் வசந்த காலமே அவன் மாந்தர் மனத்திலும் இயற்கையிலும் ஒன்றி விளைாடும் காலம். எனவே அக்காலமே காமநோன்பிற்கு உகந்தது. தரை விளக்கி, ஐய நுண் மணற்கொண்டு தெரு அணிந்து, கிழக்கு வெளுக்கும் முன்னர் எழுந்து நீர்த்துறையில் தூய நீராடுகிறாள். சுவரில் மன்மத தேவன் பேரெழுது கிறாள். அவன் உருவிலியாதலால் உருவெழுதிலள். சுறவக்கொடிகளும் கரும்பு வில்லும் கவரிப் பிணாவும் எழுதுகிறாள். வேதவல்லார்பால் கற்ற மறை மொழிகளைச் சிந்தையில் ஓதுகிறாள். நெல், கரும்பு, அரிசி, அவல் முதலியனவும் படைக்கப்படுகின்றன. தான் சிந்தையில் இருத்திய தனித்தலைவன் கண்ணபிரானேயல்லால் வேறொருவனை உடன்படேன். அவ்வாறு உடன்படுதல் வேள்வியில் வகுத்த தெய்வ அவியுணவைக் காட்டில் திரிந்தலையும் பிணநரிக்கு ஒப்படைப்பதை ஒக்கும் என்று திடவுறுதியுடன் தியானிக்கிறாள்.

வானிடை வாழுமவ வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தவவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடபபதும மோப்பதும் செய்வ
தொப்ப
ஊனிடை யாழி சங்குத் தமர்க்கென்று
உன்னித் தெழுந்தவென் தட
முலைகள்
மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய்மன்மதனே
(திருமொழி)

*பாவை நோன்பு*

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில் நீராடி, நீர்த்துறைகளில் இளம்பெண்டிர் பாவை அமைதது, அம்பிகையைச் சிந்தித்து நோன்பிருப்பர். மார்கழியில் தேவியின் அருள் வேண்டும். இந்நோன்பு, பங்குனியில் காமன் நோன்புடன் நிறைவுறும். இதனை 'தையொரு திங்களும் தரை விளக்கித், தண்மண்டல மிட்டு மாசிமுன்னாள்: ஐயநுண் மணற் கொண்டு தெருவணிந்து' எனும் நாச்சியார் திருமொழி மெய்ப்பிக்கும் சிந்தை கவர்ந்த காதலனைக் கணவனாக அருள அன்னையை வேண்டி, அக்காதலன்பால் காம உணர்வை மிகுத்துத் தன்பால் அவன் சிந்தையைத் திருப்புமாறும் தன் காம நோயைத் தணிக்குமாறும் காம தேவனை நோற்கும் எண்ணம் இந் நோன்புகளின் தொடர்ச்சியில் அமைவுறுகிறது.

வையத்து வாழ்வீர்காள் நாமும் நம்
பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்
கடலுள்
பையத் துயின்ற பரமனடி பாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம்
நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்
முடியோம்
செய்யாதன செய்வோம் தீக்குறளை
சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கை
காட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோர்
எம்பாவாய்
(திருப்பாவை)

பாவையர் நோற்கும பாவை நோன்பின் நிறை நாளில் அணிகள் பூட்டி, அருஞ்சுவை அடிசில் உண்டு குதூகலிப்பர்.

கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா
உன்தன்னைப்
................................................
மூட நெய்பெய்து முழங்கை வழிசோர
கூட மிருந்து குளிர்ந்தேலோர்
எம்பாவாய்
(திருப்பாவை)



பஞ்ச பாண்டவர் ரதங்கள் - மகாபலிபுரம்

கமலா மாரியப்பன்.

மார்கழித் திங்கள் மாதர் குலம் நோற்கும் நோன்பு, நல்ல காதலனைக் கைப்பிடிக்கும் தன்னலத்தோடு, உலக நலம் எனும் பொது நலமும் கருதி மேற்கொள்ளுமொன்று. தைபிறந்தால் வழி பிறக்குமாகையால், அதற்கு முன்னேற்பாடாக இறைவியை வேண்டுகின்றனர். இந்நோன் பின் பயனாக உலகெலாம் மழைவளம் செழித்து, பசுவினம் பால் கொழிக்கும்; எல்லா நலனும் மேம்படும்.

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி
நீராடினால்
........................ ..........
நீங்காத செல்வம் நிறைந்தேலோ
ரெம்பாவா ;
(திருப்பாவை)

கண்ணபிரான் :

திருமால்தேவன் திருவடியில் ஆன்மவொளியாகி ஒன்றிட ஆண்டாள் நாச்சியார் மேற்கொண்ட வழிபாட்டு உருவங்களில் கண்ணபிரான் வடிவமே மேலோங்கி நிற்கிறது. இறைவன் திருவவதாரங்கள் பலவற்றுள்ளும் கண்ணன் அவதாரம் முழுமை பெற்றுத் திகழ்கிறது. இறைமை எனும் மேனிலையினின்று தாழ்ந்து, மானிடப் பிறவியை ஏற்று, அதனை முழுமையாக நிறைவு செய்த பெருமை இவ்வவதாரத்திற்கு ஏற்றது. ஒரு மனிதன் வாழ்வில் அனுபவிக்கும் பல்வேறு இன்னல்களை எதிர்த்து, இன்ப நுகர்ச்சிகளைப் பெற்று, ஆயனாகவும் அரசர் குலத்திலகமாகவும் வாழ்ந்து, வழிகாட்டி, துணை நின்று, அறம் வெல்ல வகை செய்து, வாழ்வை நிறைவு செய்தவன் கண்ணபிரான். அவன் சாதாரண மனிதன் ஒருவன் இளமையில் செய்யும் காதல் விளையாட்டுகளையும் வீரதீரங்களையும் குறும்புத்தனங்களையும் புரிந்து மகிழ்ந்தவன். முழுமையான மானிடத்தை அனுபவித்த கண்ணனே மானிட இனத்தின் ஒவ்வொரு நுண்உணர்வையும் புரிந்து அருளுதற்கு உகந்தவன். இன்னோரன்ன சிறப்புக்கள் ஆண்டாளாகிய காதலி கண்ணனைத் தன் உள்ளங்கவர்ந்து, உணர்வை மகிழச் செய்யும் காதலனாக மனத்துள் வனைந்து கொண்டு உருகுகிறாள்.

ஆயர்பாடியில் ஆயர்குலக் கன்னியர் பலரும் கண்ணனின் தெய்வக் கவர்ச்சியில் கதுவப்பட்டு, அவனைத் தழுவும் சிந்தையும் வேட்கையும் மிக்குத் தத்தம் மனத்தளவில் நோன்பிருந்தனர். அன்னாரின் வேட்கையைப் பல்லாற்றானும் நிறைவுறச் செய்தான் நம்பெருமான். அப்பெண்டிருடன் அவன் கேலியாடி, விளையாடி மகிழ்வித்தன். யமுனை யாற்றில் ஆய்ச்சியக் கன்னியர் நீராடியக் கால், கரையில் அன்னவர் வைத்துச் சென்ற ஆடைகளைக் கவர்ந்து, குருந்த மரக்கிளையில் ஏறிக் கண்ணபிரான் விளையாடிய நிகழ்ச்சி, காதலன்—காதலியர்தம் விளையாட்டில் உச்சநிலையினதாக நம் நாச்சியார் திருவுளத்தில் புலப்படுகிறது. அவ்வாயர்குலக் கன்னியருள் ஒருத்தியாகவே ஆண்டாள் தம்மை ஆக்கிக் கொள்கிறார்.

காலைக் கதுவிடுகின்ற கயலொடு
வாளை விரவி
வேலைப் பிடிந்தென்னை மார்க
ளோட்டில் என்ன விளையாட்டோ
கோலச் சிற்றாடை பலவும் கொண்டு
நீயேறியிராதே
காலங் கரியபிரானே குருந்திடைக்
கூறை பணியாய்
(திருமொழி)

தம் காதலன் கண்ணன் கன்னிப் பருவத்திலிருந்து தொடர்பு கொண்டவனல்லன். அவன் மாமி மகன். சிறுவயதிலிருந்தே நெருக்கம் கொண்டவன். உறவு முறையிலும் அவன் கணவனாகப் போதருபவனே. சிறுமி நாச்சியார் சிற்றில் புனைந்து விளையாடுகிறாள். கண்ணன் எனும் காதற் சிறுவன அச்சிற்றிலைச் சிதைக்கிறான். அதனால் மனம வாடிய சிறுமி, சிற்றிலலைச் சிதையேல் என்று கெஞ்சுகின்றார்.

இன்று முற்று முதுகு நோவ இருந்
திழைத்த இச்சிற்றிலை
நன்றும் கண்ணுற நோக்கி நாங்களு
மார் வந்தன்னைத் தணிகிடாய்

(44-ஆம் பக்கம் பார்க்க)



# விமலனின் விஸ்வரூபம்

பண்டைக் காலந்தொட்டே சமய வழிபாட்டில் மிகச் சிறந்து விளங்கு வரும் நம் பாரதத் திருநாட்டில் மகா பாரதம் என்ற நூல் இதிகாசமென் னும் பெயர்பெற்று விளங்குவதாகும். இம்மகா பாரத நூலைத் தமிழில் ஆசு, மதுரம், சித்திரம்,வித்தாரம் ஆகிய நான்கு வகைக் கவிகளையும் கொண்டு வில்லிபுத்தூராழ்வார் பாடியுள்ளார். இவர் திருமால்மீது அளவிலா பக்தியுடையவராதலால் ஆழ்வார் என்ற அடைமொழியையும் சேர்த்துவழங்கப்படுகிறார். இவரியற் றிய மகாபாரதமென்னும் மகாகாவி யத்தில் பாற்கடலில் பள்ளி கொண்ட ஸ்ரீமகாவிஷ்ணுவின் அருமை, பெரு மைகளைப் பலவாறாகச் சித்தரித்துப் பாடியுள்ளார். துரியோதனனிடம் பாண்டவர்களுக்காகத் தூது சென்ற போது ஸ்ரீகிருஷ்ண பகவான் விஸ்வ ரூபமெடுத்து அனைவரையும் பரவசப் படுத்தி தன் மகிமையைக் காட்டிய விதத்தை ஈண்டுக் காண்போம்.

### ஸ்ரீ கிருஷ்ணன் தூது

உலகில் தீயோர் தொகை பெருகி நல்லவர்கள் தீயோரால் துன்பப்படு வதைப் போக்கித் தீயோரை அழித்து நல்லவர்களைக் காக்கவும், பூமா தேவிக்கு கொடுத்த வ க்குப்படி தீயோர்கள்அழித்துப் பூமியின் பாரத் தைப்போக்கவே திருமால் எடுத்த அவ தாரம் ஸ்ரீ கிருஷ்ணாவதாரமாகும். வஞ்சனையாக சகுனியின் சூழ்ச்சியால் துரியோதனன் பாண்டவர்களுடன் சூதாடி அவர்கள் நாடான அஸ்தினா புரத்தைக் கவர்ந்துகொண்டு பன் னிரண்டு ஆண்டுகள் காட்டிலும், ஓராண்டு மறைந்து வாழ்ந்து விட்டுப் பின் திரும்பி வந்தால் பாண்டவர் களுக்கு அவர்களுக்குச் சொந்தமான நாட்டைத்தருவதாகத்துரியோதனன கூறினான். அவ்விதமே பாண்டவர் கள் திரும்பி வந்து கேட்டபோது நாட்டைக் கொடுக்க மறுத்தான். பாண்டவர்களுக்காக நாடு கேட்க ஸ்ரீ கிருஷ்ணபகவான் துரியோதனனி டம் தூது சென்றும் பாண்டவர்களுக் குரிய நாட்டைக் கொடுக்க மறுத்து, ஐந்து ஊர்களையோ, ஐந்து வீடுக ளையோ கூட கொடுக்க மறுத்து பக வானையும் தூதனென்று மதியாமல் இழித்தும் பழித்தும் பலர் கூடியுள்ள அரசசபையில் பேசினான. துரியோத னனின் ஆணவத்தையும், காவத்தை யும் கண்ட ஸ்ரீ கிருஷ்ணன் விஸ்வரூப மெடுத்தார்.

திரு. புலவர். மணி,

வேலூர்.

## விஸ்வரூபத்தில் பகவான் தோற்றம்

தூது வந்த கண்ணபிரானைக் கொல்லத் துரியோதனன் அழகிய ஒளி பொருந்திய இரத்தினங்கள் பதித்த ஆசனத்தினடியில் மூங்கில் பிளாச்சுகளைப் ' பரப்பியிருந்தான். கீழேயுள்ள அறையில் பலம் பொருந திய மல்லர்களையும், வில் வீரர்களை யும், வாளேந்திய வீரர்களையும, பயங்கரமான கண்களையுடைய அரக் களையும் துரியோதனனின் கட்ட ளைப்படி கண்ணபிரானைக் கொல்ல தஙக வைத்திருந்தான்.

பாண்டவர்களுக்காகத் துரியோதன னின் அரசசபையை அடைந்த கண்ண பிரானைத்துரியோதனன் பொய்யான அன்போடு வரவேற்று அங்குள்ள ஆசனத்தில அமரும்படி கூறினான். மாமாயனான கணணபிரானும் துரி யோதனன் தன்னைக் கொல்ல நினைத்த வஞ்சனையை எண்ணிச் சிரித்தபடியேஅவ்வாசனத்தில் அமர்ந் தார். கண்ணபிரான துரியோதனன் காட்டிய அவ்வழகிய இரத்தினங்கள் பதித்த அவ்வாசனத்தில் அமாந்தவு டன்நிலவறையின்மேல் பரப்பப்பட்ட மூங்கில் பிளாச்சுகள் நெறு, நெறு வென்றுமூங்கில்கள் முறியும் சப்தத் தோடு அவ்வாசனம்கொடிய பாதால அறையில் போய் விழுந்தது.



எமன் என்று சொல்லத் தக்க அர சனான துரியோதனனின் சூழ்ச்சியை உணர்ந்து பொங்கி எழுந்த கோபத் துடன் திருவடிகள பாதலம் செல்ல வும், திருமுடிகள வானம் புகவும விஸ்வரூபமெடுத்தார் கண்ணபிரான் துரியோதனனது சூழ்ச்சியை எண்ணிச் சினந்த தேவர்கள் அஞ்சித் திரு மாலை வணங்கவும், பாதலத்தி லுள்ள நாகங்கள் அவ்வடிகளின் பாரத்தைத் தாங்கமாட்டாது நாம் அழிந்தோம் என்று வருந்தவும், உல கம் ஒன்றுபடும்படி அதாவது எல்லா வுலகங்களிலும் வியாபித்தவராய் ஓங்கி உயர்ந்தார்.

## வீரர்களை அழித்தல்

கண்ணபிரானைக்கொல்லப் பாதால அறையில் காத்திருந்த வீரர்கள் அனைவரும் தத்தம் உடல்களைக் கண்ணபிரான் பல , கால்களைக் கொண்டுஉதைத்ததால்இடிக்குஅஞ்சி நடுங்குகின்றநாகங்களைப்போல அஞ் சினர். வீரர்களின் தலைகள் துணடிக கப்பட்டு அவைபோய் நரகர் உலகம் முழுவதும் விழுந்தன. கூரிய வாள்களை ஏந்திய வீரர்களைக் கரிய மேகம்போன்ற திருமால் தாக்கி அவ் வீரர்களின் தோள்கள் அற்றுப்போகு மாறு செய்தார். பாற்கடலில் பள்ளி கொண்ட பரந்தாமன் வேல்பாய்ச்சிய விரர்களை, முருகக் கடவுள் சூரபது மாதி அரக்கர்களின் தலைகளை அறுத்தெறிந்தது போல் அறுத்தெறிந்தார். கண்ணபிரானைக் கொல்ல நினைத்த வீரர்கள் அனை வரும், முன்னொரு காலத்தில் அகத் திய முனிவன வந்து அழுத்தப்பயந்து பூமியில் ஒடுங்கிய விந்தியமலையைப் போன்றவராயினர்.

இக்காட்சியைக் கண்ட தேவர் களும், மற்றவர்களும் எந்த உலகம் அழியாமல் நின்றுவிடும்?எந்தக் கடல் பொங்காமல் நின்று விடும்? எந்த

மலைகள் சரியாமல் நின்று விடும் என்று அஞ்சினர். துளசிமாலையணிந்த துவாரகையின் வேந்தனாகிய கண்ண பிரான் மேகத்தின் இடி முழக்கம் போலவும், இவ்வுலகத்தைப் பிரளய காலத்தில் கடல் விழுங்கியபோது ஏற்பட்ட பயங்கரமான ஆரவாரம் போலவும், சூறைக்காற்றின்பேரொலி போலவும் அழகிய கண்களிலிருந்து நெருப்பு வெளிப்பட அண்டத்தின் மேல்முகட்டினோடு பொருந்தி நின்று சிரித்தார்.

விஸ்வ ரூபங்கொண்ட கண்ணபிரா னது கைகளில் ஒன்று பவளவாயில் சங்குகனை ஊதின. பகை அழிக்க வல்ல கைகள் உலகம்அஞ்சும்படி எரி யிரும்புகளை எடுத்து வீசின. சில கைகள் கூரிய அம்புகளையும், கரு டாஸ்திரத்தையும் பகைவர்கள்மேல் பிரயோகித்தன. மேலும் வில், வாள் கதை ஆகியவற்றையும் கொண்டு ஆயிரமாயிரம் திருக்கரங்கள் வெளிப் பட்டுப் போரிட அத்தோற்றத்தைக் கண்டு தேவர்களும் முனிவர்களும் கண்ணபிரானின் விஸ்வருபத்தைக் கண்டு வியந்து வணங்கி, ஓம் என் னும் பிரணவத்தைப் பாயிரமாகக் கொண்ட வேதங்களைச் சுரம் பிழை யாமல் பாடித் துதித்தனர்.

'நான்முகங்களாலும் எப்போதும் வேதம் ஓதிக்கொண்டிருக்கும் பிரம் மாவின் தொழிலைச் செய்து வரு கின்ற திருமாலே! உருத்திரனது அழித்தல் தொழிலையும் செய்து வருகின்ற திருமாலே! யானையாகிய கஜேந்திரனின் துயர் தீர்த்த பரம பொருளாகிய திருமாலே! தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமியின் கணவரே! கோபத்தை விட்டு சாந்தி "டையுங்கள்" என்று மூவுல மக்களும் தேவர்களும், முனிவர்களும் கோபங் கொண்டு விஸ்வருபமெடுத்த ஸ்ரீ கண்ணபிரானை வேண்டி வணங்கி னர். திருமாலின் பெருமையை விளக்கும் வில்லிபுத்தூராழ்வாரின் அப்பாடலாவது:



கற்கோயில்-மகாபலிபுரம்.

ஆரணனே யரனே புவனங்களனைத்
தையும் மன்றுதவும்
காரணனே கருணாகரனே கமலாசனி
காதலனே
வாரணமே பொதுவே யொரு
பேரிடவந்தருளும் புயலே
நாராணனே முனியேன்
முனியேலென நாகர்பணிந்தனரே.

பிரும்மாவின் தொழிலான படைத் தல் தொழிலையும், சிவபெரு மானின் அழித்தல் தொழிலையும் செய்து வருவதால் திருமால் ஆரணன் என்றும், அரன் என்றும் வில்லிபுத்தூராழ்வார் காத்தல் தொழிலையும் செய்து வரும் திரு மாலைப் போற்றிப் பாடியிருப்பதை யறியலாம்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான சினம் தணிதல்

பீஷ்மர், கர்ணன், திருதராட்டி ரன் துரோணர் மற்றும் அரச சபையிலிருந்த பலரும் எழுந்து குவிந்தகைகளைச் சிரத்தின் மேல் வைத்து அறிவு எய்திய மனத் தினராய் ஸ்ரீகிருஷ்ணபகவான் அரு கே சென்று அவரை நோக்கி 'மனத் தில் உறுதியான அறிவு சிறிதும் இல் லாத சிறுவர்களாகிய நாங்கள்செய்த பெரும் பிழையைப் பொருத்தருள வேண்டும்' என்று வணங்கித் துதித் தார்கள்.

தேவரும், இந்திரனும், சிவனும், பிரம்மாவும், பூலோக அரக்கர்களும் மற்றுமுள்ள யாவரும் அன்போடு ஸ்ரீ கிருஷ்ண பகவானை ஆயிரம் திரு நாமங்கள் கொண்டு துதித்து வணங் கியதால் திருமூர்த்திகளும் ஒன்றென நின்ற தலைவனான ஸ்ரீ கிருஷ்ணபக வான் சினந்தணிந்து மிக வுயர்ந்த அண்ட கோளம் முழுவதும் விரிந்து பொருந்திய விஸ்வருபமானது ஒடுங் கிப் பழைய உருவை அடைந்தார். ஸ்ரீ கிருஷ்ணபிரானை அனைவரும் துதித்து வணங்கிய கருத்துக்களைக் கொண்ட இச்சிறப்பான பாடலை வில்லிபுத்தூராழ்வார் பாடியிருப்ப தாவது:

தேவரும் வாசவனுஞ் சிவனுந்
திசைமுகநாரதிபரும்
யாவருமன்பினோடாயிர நாமமு
மெண்ணியிறைஞ்சுதலால்
மூவருமொனறென நின்றருணார
தனுமுனிவு தவிர்ந்தருளா
மீவருஅண்ட முறுந்திருமேனி
யொடுங்கினன் மீளவுமே;

துரியோதனனின் ஆணவம்

வேதங்களில் கூறியபடியே தன்னைவிட உயர்ந்தவர் எவரும்




இல்லாத கண்ணபிரான் பூமண்டலம் முழுவதும் தன் திருவடியில் மறையும் படி விஸ்வரூபத்தில் நின்றபோதும், உருவம் அடங்கப் பெற்ற பின்னும் ஆசனத்திலிருந்து எழாமலும், எழுந்து சிரத்தில் கைவைத்து வணங்காமலும், ஸ்ரீபகவானுடைய பெருமையைச் சிறிதும் பேசாலும் ஆணவத்துடன் தன் ஆசனத்திலேயே அமர்ந்திருந்தான்.

கண்ணபிரான் துரியோதனனை நோக்கி 'சந்திரவம்சத்து அரசர்களில் வந்தவனே! உன்னுடைய துர்மதியால் நீ என்னைக் கொல்ல நினைத்தாய்! ஒரு நொடிப் பொழுதில் உன்னையும், உன் குலத்தையும் வேரோடு அழியும்படி போரிட்டு அழிப்பேன். முன்பு ஒரு முறை நான் "போரில் படை எடேன்" என்று வாக்குக் கொடுத்ததாலும், திரௌபதியைத் துச்சாதனன் துகிலுரிந்த போது பண்டவர்கள் எடுத்துக்கொண்ட சபத வார்த்தைகள் வீணாகக்கூடாது என்றும் எண்ணியே இப்போது உன்னைக் கொல்லாது விடுகிறேன்' என்று கூறினார்.

பாண்டவர்களின் உரிமையைக் கேட்க ஸ்ரீகிருஷ்ணபகவான் துரியோதனனிடம் தூது சென்று கேட்டபோது துரியோதனன் பகவானை பழித்துப் பேசி உரிமையைக் கொடுக்காமல் போருக்குத்தயாரானான். 'தீதும் நன்றும் பிறர்தரவாரா' என்று கணியன் பூங்குன்றனார் கூறிய படி ஒருவனது பெருமைக்கும், துன்பத்துக்கும் தானே காரணமாவது போன்று துரியோதனனும் அவன் குலமும் அழிவதற்குத் தன்னுடைய ஆணவமே காரணமாயிருந்தான். ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாணடவர்களுக்குத் துணையாகவும், அரச்சுனனுக்குத் தேரோட்டியாகவும் இருந்து பதினெட்டு நாட்கள் நடத்திய போரில் அதர்மத்தினை அழிக்க துரியோதனனையும் அவன் குலத்தையும் அழித்து தருமத்தின் வழி நின்று பாண்டவரையும் அவன் குலத்தையும் காத்து பூமாதேவிக்குக்கொடுத்த வாக்குப்படி பூமியின் பாரத்தைக் குறைத்து ஸ்ரீ கிருஷ்ணாவதாரப் பணியை முடித்தார். ★

(16-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பெருமான் பூமியிலே வந்து அவதரித்து அவர்களை அழியச் செய்த செயல்களை எண்ணி 'மனப்பரிப்போடழுக்கு மானிட சாதியில் தான் பிறந்து தனக்கு வேண்டுருக்கொண்டு தான் தன சீற்றத்தினை முடிக்கும் புனத்துழாய் முடிமாலை மார்பன்..(6-4-7) என்று அநுபவிப்பர். அதாவது, குழந்தை கிணற்றில் விழுந்தால் எடுக்க வரும் தாய் நெஞ்சு நொந்து வந்து எடுக்குமாபோலே 'இவற்றுககு உதவப் பெற்றலோம்' என்று திருவுள்ளத்தில் தளர்த்தியோடே கண்ணன் வநது பிறந்ததாகக் கூறுவர். கண்ணன் தன்னுடைய கருணை என்னும் குணம் கொணடு குற்றங்கட்கு எதிர்த்தட்டாய் அப்ராக்ருத திவ்ய வடிவோடே தேவகி வயிற்றில் கர்ப்ப வாசம் இருந்து பிறநதவன். தனக்கு வேண்டும் உருக்கொண்டு பிறந்தவன். அடியார்கட்காக நான்கு தோள்களையுடையனாவது, இரண்டுதோளுடையனாவது, கோபாலனாவது என்று தன் விருப்பம் கொண்டு இருந்ததாகக் கூறுவர் பெரியவாசசான் பிள்ளை. இவவாறு அடியார்களின் விரோதிகளைப் போக்குபவன் புனைத்துழாய் முடிமாலை மார்பினனாய் இருக்கிறான். அதாவது அடியார்களின விரோதியைப்போக்கித் திருமஞ்சனம் பண்ணி, ஒப்பித்து, பரமபதத்தில் இருப்பதுபோல செவ்வி பெற்றிருக்கிற திருத்துழாய் மாலையைத் திருமுடியிலும் திருமார்பிலும் அணிந்திருப்பனாம்.

**பாணனை ஆயிரம் தோள் துணித்தது:**

கணணனபூமியிலஉளளாரோடுசுவர்க்கத்தில்உள்ளாரோடு வாசியற வியக்கும்படிபாணாசுரனுடன் போர் செய்தான்.பார்க்கும் பொருளை எல்லாம் வியக்கும் மனிதரோடு ஒக்க, ஒன்றுக்கும் மாறுதலில்லாமல் தம் தாமைப் போரப்பொலிய நினைந்திருக்கும் தேவர்களும் வியக்கும்படி போர் செய்தான். 'ஈச்வரன்' என்று தன்னை அபிமானித்திருக்கும் சிவன் முதலானோரும் கெடும்படியாகப் போர் செய்தான. கடைசியில் பாணன் ஒருவனே எதிராயிருக்கப் படைத் துணைக்கு வந்த சிவன சுப்ரமணயர் களோடும் பெரிய போரைச் செய்து அவர்களும் புறமுதுகு காட்டிச் சென்றனர். 'வாணனாயிரநதோள் துணித்ததும்' என்கிறபடியே பாணனுடைய யுத்த கண்டூதிப்ரசுரமான (யுத்தம் செய்ய வேண்டும் என்ற நினைவு நிறைந்த) ஆயிரந்தோள்களையும் துணித்தான். இத்தகைய வரலாற்றைக்காணும் நெஞ்சுடைய ஆழ்வார்கரு மற்ற தேவர்கள் 'காப்பாளர்' என்று இருக்கிற கலக்கமும், எமபெருமான் காக்கும் தன்மையில் ஐயப்படும் கலக்கமும், தனக்குத் தானே கடவன் என்ற கலக்கமும் இல்லையாம. இவவிடத்தில் 'காணும் நெஞ்சுடையேன்' என்று சொல்லுவது நெஞ்சென்னும் உட்கண்ணைச் சொன்னபடி.

**மாணியாய் நிலங் கொண்டது:**

கண்ணனை 'மாணியாய் நிலம் கொண்ட மாயன்' என்று அநுபவிக்கிறார் ஆழ்வார். அதாவது, கண்ணனின் கண்ணழிவற்ற அழகாலும், வரையாதே எல்லாரையும் தீண்டுகையாலும், அடியார் திறத்து ஒரு பக்கல் சாரும் தன்மையாலும், செய்யும் ஆனைத்தொழில்களாலும், க்ருஷ்ணாவதாரத்தோடு ஒத்திருக்கையாலும், வாமனன் மண்ணளந்ததை அநுபவிக்கிறார் ஆழ்வார். இப்படி வாமனன் மண்ணளந்ததைத் தனக்குக் காட்டி உதவுகையால் 'மாணியாய் நிலங் கொண்ட மாயன் என் அப்பன்' என கிறார்.

மேன்மைக்குரிய அடையாளமான திருவாழிதிருச்சங்கோடு இருந்த இருப்பைக் கூறும்போது 'வலக்கை யாழி இடக்கைச் சங்கம் இவையுடை மால் வண்ணன்' என்பர் ஆழ்வார். அதாவது வலக்கையில் திருவாழியும் இடக்கையில் திருச்சங்கும் கொண்டு கறுத்த நிறத்தையுடையவனாய் இருந்த இருப்பைக் கூறுகிறார். கஞசனூர் வண்டுவரைப் பெருமாள் என்னும ஆசார்யர் பட்டரிடம், 'மால்வணணன்'என்று அமைந்திருகக 'வலககை .....சங்கம்' என்று சொன்னதறகுக் காரணம் கேட்க, அதற்கு பட்டர், 'அப்ராக்ருத வஸ்துவுக்கு லக்ஷணமிறே திவ்யாயுதங்கள் என்று சுவைபடக் கூறினார். அதாவது திவ்யமங்கள விக்ரஹத்துக்கு அடையாளமாய் இருப்பது திவ்யாயுதங்களான திருவாழியும் திருசங்கும் என்றபடி.

## புதிய சேவை

திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மையின் கீழ் செயற்படும் கீழ்வரும் கோயில்களில் நபர் ஒருவர் ரூ. 5/- செலுத்தி வாராந்திர அபிஷேக சேவைகளைக் கணடு களிக்கலாம்.

1) ஸ்ரீ வேதநாராயணசுவாமி கோயில், நாகலாபுரம்.
2) ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில், நாராயணவனம்
3) ஸ்ரீ வேணுகோபாலசுவாமி கோயில், கார்வேட்டுநகரம்.
4) ஸ்ரீ பிரசன்ன வேஙகடேஸ்வரசுவாமி கோயில், அப்பளாயகுண்ட்டா.
5) ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில், ஸ்ரீநிவாசமங்காபுரம்.
6) ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்கள், ரிஷிகேஷ்.

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

இப்படிப்பட்ட மால் வண்ணனான கண்ணன் பூபாரத்தைக் குறைப்பதற்காக பாரதப் போரைப் பண்ணியதையும் அதன் பிறகு தன் இருப்பிடமான பரமபதத்தை அடைந்ததையும் காட்டக் கணடு 'மண் மிசைப் பெரும் பாரம் நீங்கவோர் பாரத மாபெரும் போர் பண்ணி மாயங்கள் செய்து சேனையைப் பாழ்பட நூற்றிட்டுப் போய் விண்மிசைத் தனதாமமே புக மேவிய சோதி (6-4-10) என்று அநுபவிப்பர். அதாவது பூமியின் மேலே, பூபாரத்தைப் பொறுக்கும் பூமாதேவிக்கும் பொறுக்க முடியாத பெரிதான பாரம் நீங்கும்படி ஒப்பற்ற பாரதப்போர் செய்தான் கண்ணன். 'விண்மிசைத் தனதாமமே புக மேவிய சோதி' என்ற இடத்தில் கண்ணன் தன் இருப்பிடம் சென்றதைக் கூறும்போது விரோதிகள் எல்லோரையும் உழவுகோலாலே விழவிட்டு நல்லோர்கள் எல்லோரையும் கண்ணாலே விழவிட்டுப் போனானாக அநுபவிப்பர் நம்பிள்ளை.

இவ்வாறு அவதாரம் தொடக்கமாக நடுவுள்ள ஆபத்துகளிலினின்றும் தப்பி அடியார்களை வாழ்வித்துத் தனக்கே அமைந்த இருப்பிடமான பரமபதம போய் புகுந்ததளவும் அநுபவிக்கப்பெற்ற ஆழ்வார் 'எனக்கு ஆர் பிறர் நாயகர்' என்கிறார்.

மாறன் கலையை உணவாகப்பெற்ற மணவாள மாமுனிகள், கண்ணனுடைய திவ்யமான திருவிளையாடல்களைஇரவுபகல் பாராது எப்போதும் பரவும்மனம் பெற்று களித்துப்பேசிய ஆழ்வாரது சொல்லாகிற தேனில் தம்மனத்தை மூழ்கச் செய்கிறார்.

குரவை முதலாங் கண்ணன் கோலச
செயல்கள்
இரவ பகலென்னாமலெனறும்—
பரவுமனம்
பெற்றேனென்றே களித்துப் பேசும்
பராங்குசன் தன
சொற்றேனினெஞ்சே துவள்.
ஆழ்வார் எம்பெருமானார் சீயர்

திருவடிகளே சரணம்

(20-ம பக்கத் தொடர்ச்சி)

தற்குக்காரணம் என்ன? இந்த உலகத்திலே மனிதர்களாகப் பிறப்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் சிறுவர்களாக இருக்கின்ற வரைக்கும் அவர்களுக்கு அறிவு சுருங்கி இருக்கும். இதயமானது விரிந்து இருக்கும். எந்தக் குழந்தையைப் பார்த்தாலும் வயதுக்கு ஏற்றபடிதான் அறிவு இருக்கும். ஆனால் இதயம் எதைக் கண்டாலும் இளகி கசிந்து உருகுவதாகத்தான் இருக்கும். அதே மனிதன் ஏழு எட்டு என்கின்ற வயது எல்லையைத் தாண்டி 30 அல்லது 35 வயதுடையவனாக வளர்ந்து விட்டான் என்று சொனனால் அவனுக்கு அறிவு விரிந்து விடுகிறது. இதயம் சுருங்கி விடுகிறது. இதனால் ஒன்றும் பயனில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் அறிவு என்றும் விரிந்து முதிர்ந்த நிலையிலும் இதயம் சுருங்கியும் இருக்கவேண்டும் என்பதைக் காட்டுவதுதான் வினாயகரின் உருவம். கொங்கணகிரி என்கின்ற ஊரிலே இருக்கின்ற முருகனை வேண்டிப் பாடுகின்ற அருணகிரிநாதர் நமக்கெல்லாம் வினாயகருக்கு இருக்கின்ற மனம் போல இருக்கவேண்டும் என்பதை கூறும் போது,

"ஐங்கரனை ஒத்தமனம் ஐம்புலனகற்றி வளர்
அந்திபகலற்ற நினைவு அருள்வாயே"

என்று பாடியுள்ளார்.

சென்ற பிறப்பிலே வந்த தீய வினையானாலும் சரி வினாயகப் பெருமானை வணங்கினால் அவை நம்மை விட்டு விலகிப் போகும். நம்மை அடைய அவை அஞ்சுகின்றன என்கிறார் நம்பியாணடார் நம்பிகள். எறும்பு வீட்டிலே வைத்திருக்கும் இனிப்புப்பொருட்களை உண்ணலாம். மாவுப்பொருள்களை ஊர்ந்து வந்து உண்ணலாம். ஆனால் அந்த எறும்பு அடுப்பங்கரைக்குச் சென்று அங்கே அடுப்புக்குள் இருக்கும் நெருப்பை நான் உண்ணுவேன் என்று எணணினால் என்ன ஆகும்? எறும்பு எப்படி நெருப்பின் பககம் போய் அதை ஒன்றும் செய்யமுடியாதோ, அதைப் போல வினாயகரை வணங்குபவரை தீவினைகள் ஒன்றும் செய்ய முடியாது என்று திருநாரையூரில் கோயில் கொண்டுள்ள நம்பியாண்டார் நமபிகள் கூறுகிறார்.

"நாரையூர் மன்னும பொருப்பை அடிபோறறத்
துணிந்தால் நெருபபை அருந்த எண்ணுகின்ற
எறும்பன்றே அவர் வருத்த எண்ணுகின்ற மலம"

அடுத்து ஜீவான்மா பரமான்மா ஐக்கியம் என்று வேதாந்தம் பேசுகின்ற கருத்தை வினாயகப்பெருமான் வரலாறு ஒன்றின் மூலம் நன்கு அறியலாம். தேவேந்திரன் சீர்காழி என்ற பகுதியிலே வந்து சூரபத்மனுக்காகப் பயந்து ஒளிந்து கொணடிருக்கிறான். அவன் அங்கே ஒரு மூங்கிலில் சிவபெருமானை ஆவாகனம் செய்து தன்னுடையதுன்பங்கள் நீங்கவேண்டுமென்று வழிபட்டுக் கொண்டிருக்கிறான். அவனுக்கு அந்த இடத்திலே சோதனைக்கு மேல் சோதனை வருகிறது. சிவனை அர்ச்சித்து வழிபட இந்திரனுக்கு மலர்கள் கிடைக்கவில்லை. காரணம் மழை அல்லாததால் எங்கும் தண்ணீர் இல்லை. சோலைகளில் மலர்கள் பூக்கவில்லை. அப்படி அவன வருநதிக் கொண்டிருக்கிற போது நாரதர் வந்து அவனைப் பார்த்து 'உனக்கு இங்குத் தண்ணீர் பஞ்சம நீங்கிசோலைகளில் மணமிக்க நல்ல மலர்கள் கிடைக்கவேணடும் என்றால்நீ வினாயகப்பெருமானை வணங்கினால் போதும்' என்றார். அப்படியே இநதிரன வினாயகப்பெருமானை வணங்கினான். அகத்திய முனிவர் தன் கையிலே கமண்டலத்துடன் ஒரு மலைச்சாரலின் பக்கம் வந்து ஒரு இடத்தில் கமண்டலத்தை வைத்து விட்டு தியானத்தில் இருந்த போது வினாயகப்பெருமான் ஒரு காக்கை வடிவத்திலே சென்று அந்த மண்டலத்தினுடைய விளிம்பிலே உட்கார்ந்து தன்னுடைய கால்களை அழுத்தி கமணடலத்தைக் கவிழ்த்து விட்டார், அதுவனா அந்தக் கமண்டலத்துக்குள் சிறை பட்டுக் கிடந்த தண்ணீர் ஒரு சாதாரண பூங்கொடியின் உருவத்தோடு வெளிப்பட்டு கொஞ்சம் கொஞ்சமாக விரிந்து அகன்று காவிரி என்னும் பெயர் கொணடு கடைசியாக காவிரிப்பூம் பட்டினம் என்ற இடத்தில் வந்து கடலோடு கலநது விட்டது என்று காவிரி வந்த கதை கந்தபுராணத்தில் கூறப் பட்டிருக்கிறது.

இது என்ன கதை? இந்தக் கதையை ஏற்றுக்கொள்ள முடியுமா? கமண்டலத்திலே இருந்து ஒரு காவிரி வந்தது என்பது எப்படி உண்மையாக இருக்க முடியும் என்ற ஐயப்பாடெல்லாம் நமக்குத்தோன்றுவது இயற்கைதான். ஆனால் எந்த ஒரு கதைக்கும் அதன் பின்னால் ஒரு தத்துவம் மறைந்திருக்கிறது என்பதை மறந்து விடக்கூடாது. கதையைப் படித்து தத்துவத்தை வெளியே கொண்டுவர வேண்டியது நம்முடைய கடமை. இங்கே மனிதர்கள் எல்லோரும் கமண்டலம். அந்தக் கமண்டலத்துக்குள்ளே தண்ணீர் சிறைபட்டுக் கிடந்ததைப் போல இந்த ஒரு மனிதனாகிய கமண்டலத்துள்ளும் ஆனமா சிறைபட்டுக் கிடக்கிறது. மனிதன் முதலில் ஆத்மாவை அறிவதில்லை. உடம்புதான் எல்லாம் என்றிருக்கிறான். கமண்டலத்துக்குள்ளே தணணீர் சிறைபட்டு கிடக்குமவரை அந்த கமணடலத்தையே உலகம் என்று தண்ணீர் எணணுவதைப் போலே இந்த உடம்புக்குளளே ஆன்மா சிறைபட்டுக் கிடக்கும் வரை இந்த உடமபையே மனிதன் ஆன்மா என்று எண்ணிக்கொண்டிருக்கிறான். வினாயகப்பெருமான் கமண்டலத்தைக்கவிழ்த்தவுடன்சிறைபட்டுக்கிடந்த தண்ணீர் கமண்டலத்தை விடடு வெளியேறி கொஞ்சம்

கொஞ்சமாக விரிந்து பரந்து பட்ட கடலைச் சென்று அடைகிறது. அது போல மனிதனும் வினாயகப் பெருமானை வணங்குவானானால், தன்னுடைய உடம்பையே ஆன்மா என்று எண்ணிக் கொண்டிருந்தவன் அதாவது தனது வாழ்வு முழுதும் உடம்பே என்று எண்ணிக் கொண்டிருந்தவன் தன் உடம்பை மறந்து பரந்து கிடக்கின்ற இந்தபிரபஞ்சத்தை சூரியனை சந்திரனை, மலையை, கடலை, காற்றை, உயிர்களை, பயிர்களை இவ்வளவு காட்சிகளையும் அறபுதமாகப் படைத்திருக்கின்ற இந்த உலகத்தைப் பற்றிய சிந்தனை உள்ளத்தில் விளைய விளைய அதன் உள்ளம் பரந்து பரந்து கடைசியாக இவற்றையெல்லாம் படைத்த ஒரு பரம் பொருளல்லவா இறைவன் என்று நினைந்து ஒரு கடலினிடத்தே சென்று அவனுடைய ஆன்மா அதாவது உள்ளம் அல்லது மனச்சாட்சி கடலோடு கலக்கிறது. இங்கே கமணடலம் என்பது மனிதன். கமண்டலத்துக்குள்ளே சிறைபட்டுக் கிடக்கும் தண்ணீர் என்பது ஆதமா, வினாயகப்பெருமான் குருநாதர். அவர் கவிழ்த்து விட்ட கமண்டலத்துத் தண்ணீர் கொஞ்சம் கொஞ்சமாக விரிந்து பரந்து காவிரியாகக் கடலோடு கலப்பது போல வினாயகப் பெருமானை வழிபட்டால உள்ளத்தில் சிறைபட்டுக் கிடக்கின்ற ஆத்மா பரமாத்மாவோடு கலக்கும் என்பது இதற்கு உள்ளே பொதிந்து கிடக்கும் பொருள் ஆகும்.

“ படிமிசை அதனைத்தள்ள படர்ந்த
காவிரியின தன்மை அடிகளின்
அருளால
போகும் ஆருயிர் போன்றதனறே ”

என்று வினாயகப் பெருமானை குருவாகக் கொண்டால் நம் ஆன்மா பரமான்மாவோடு இரண்டறக் கலந்து நாம் பிறந்த பயனை மிக எளிதில் அடைவோம்.



# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3 அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. கண்ணன் பேசுகிறுன் —நஜன் | 0—50 |
| 10. சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 11. முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |

## சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு “மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி” எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

# கோதையாரின் காதல்

திரு. வே. சோமசுந்தரம்,
நங்கநல்லூர்

" மலரினும் மெல்லிதுகாமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படுவர் ".

என்று மானிடக்காதலின் அருமையை எடுத்தியம்புகின்றது திருக்குறள். மானிடக் காதல் உரம் பெறுவதற்குக் காதலர்கள் ஒருவரையொருவர் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் நெறி பெரிதும் உதவுகின்றது. ஆனால் இறைவனிடத்து அடியார்கள் கொள்ளும் காதலோ நேரடியான தொடர்பற்றது. இறைவனை நேரில் காணாமலேயே, அவனின் இருப்பையும், இயல்பையும் முன்னோர் மொழிந்த பொன்மொழிகள் வாயிலாய் அறிந்து தொழத் தொடங்குகின்றனர் இறையன்பர்கள். அவர்கள் பொன்னுக்காய்-பொருளுக்காய்-பரமனிடம் அடி பணிவதில்லை. இச்சை தீர வேண்டி இங்கிதம் பேசுவதில்லை. ஆண்டவனோடு ஐக்கியமாவதே ஆன்மா ஈடேறும் நெறியென உணர்ந்து பக்தி வயப்படுகின்றனர். "உன்னைச் சரண் புகுந்தேன்; நீ யன்றி வேறு கதியிலேன்" என்று சரணாகதி அடையும் அவர்களை இறைவன் தன்னோடு சேர்த்துக் கொள்கிறான்.

இறைக் காதலில் மூழ்கித் தலைப்பட்ட அடியவர்கள் அவன் புகழைப் பாடிப்பரவி போற்றுகின்றனா. அவர்தம் புகழ்மொழிகள் மானிடக் காதலரின் அன்பு வார்த்தைகளினும் ஆழங்கால்பட்டுக் காண்கின்றன. இதனை நாம் அடியார்களின 'நாயக-நாயகி' பாவனையில் அமைந்த பாடல்களைப் பயிலும்போது நன்றாக அறியலாம். இறைவன் ஒருவனே அகிலாண்டகோடி நாயகன். இம்மண்ணுலகில் பிறப்பெடுத்த ஆணும், பெண்ணுமான அனைத்துயிர்களும் அவனது நாயகிகளே. இக்கோடானுகோடி நாயகிகளும் அந்த ஏக இறைவனோடு ஐக்கியமாவதையே விரும்புகின்றனர். அவ்விருப்பம் ஈடேற வேண்டி ஏக்கத்தோடு இறைவனை நோக்கி காதல் மொழிகள் பலப்பல புகலுமாற்றை நாயக-நாயகி பாவனையிலான பாடல்கள் அனைவருககும சொல்லிக் கொடுக்கின்றன.

அவ்வாறான நாயக - நாயகி பாவனையில் இயற்றப் பெற்ற திருவிளங்கு நூலே "நாச்சியார் திருமொழி"யாகும். இதனைப் பாடிய பெரும் புகழுக்குரிய பாவையார், திருப்பாவை நல்கிய கோதையார் ஆவர். அவர் புதுவையர்கோன் விட்டு சித்தரால் திருத்துழாய் நந்தவனத்தே கண்டெடுக்கப் பெற்று வளர்ந்தவர். "மானிடவர்க்கென்று பேசசுப்படில் வாழகில்லேன்" என்று வைராக்கியம் பூண்டவர். திருவரங்கன் அருமைப் பெருமைகளைக் கேட்டு அவனுக்கே மணவாட்டியாகும் ஆசை பூணடவர். அவ்வாசை வழிப்பட்ட காதலின் வெளிப்பாடே நாச்சியார் திருமொழியாகும். இப்பனுவற்றிரட்டின் கண் ஒரு நூற்று நாற்பத்தி மூன்று திருப்பாடல்கள உள்ளன. பதிநான்கு திருமொழிகளென பகுக்கப்பெற்று இலங்குகின்றன. அவற்றின் சுவை தேறும் வகையில் ஒரு சிறிது காண்போம.

கோதையார் காதல் வயப்பட காரணமானவன சாதாரணமானவனல்லன். அவன் கண்ணனெனனும் கருந்தெய்வம்.

" கருவுடை முகில் வண்ணன் காயா
வண்ணன்
கருவிளை போல் வண்ணன் கமல
வண்ணத் திருவுடை முகத்தினில்"

" பூமகன் புகழ் வானவர் போற்று
தற்காம் மகன்
அணி வாணுதல தேவகி மாமகன்
சீர் வசுதேவாதம் கோமகன்"

" அற்றவன் மருதம் முறிய நடை
கறறவன
கஞ்சனை வஞ்சனையினால்
செற்றவன
திகழும் மதுரைப்பதி கொற்றவன்"

அப்பெருமானிடம் தம் மனதைப் பறி கொடுத்த கோதையார், காதல் வெள்ளத்தே மூழ்கி கரை காணாது தவிக்கலானார். அத்திருவேங்கட நாதனிடம் தன்னைக் கொண்டு சேர்க்குமாறு காமவேளிடம் மடைறாடுகின்றார். அவ்வுத்தமனுக்கே தம் உடலும் மனமும ஒரு சேர அர்ப்பணமென்று அழுத்தந்திருத்தமாகக் கூறுகின்றார்.

"வானிடை வாழும்அவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில்வகுத்த அவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வ
தொப்ப
ஊனிடை யாழிசங்கு உத்தமாக்கென்று
உனனித தெழுநதஎன
தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில லேன்கண்டாய் மன்
மதனே!"

என்ற நாச்சியார் திருமொழி உவமையழகும், கோதையாரின் உள்ள உறுதிப்பாடும் பொலிய விளங்குவதைக் காணலாம்.

கோதையார் தம்மை ஓர் ஆய்ப்பாடி இடைப்பெண்ணாகப்பாவித்துக் கொள்கிறார். சிறுமியாய் இருக்கையில் அவர் சிற்றில் இழைத்து விளையாடும்போது கண்ணன் அங்கேவந்து அதைச் சிதைத்துக் குறும்பு செய்

தான். அப்பொல்லாங்கு புரியும் மாயனிடம் கோதையாரின் மனம் ஒன்றிப் போனதால் சிதைந்த மன தினரானார். அவர் சிறிதும் எதிர் பாராத நேரத்தே அவரைக கட்டி யணைத்துக் கொணடான் அக்கள் வன்.

" முற்றத் தூடுபுகுந்து நின்முகம
காட்டிப் புன்முறுவலசெய்து
சிற்றி லோடுஎங்கள் சிந்தை யும்சிதைக
கக்கடவ வயோ? கோவிந்தா!
முற்ற மண்ணிடம் தாவி விணணுற
நீண்டளந்துகொண்டாய்! எமமைப
பறறி மெய்ப்பிணக் கிட்டக்கால்இநதப்
பக்கம்நின்றவர் என்சொல்லார்?"

என்று கண்ணனைக் கோதையார் வினவுகின்ற வினாவில், "இவ்விதம் செய்யலாமோ?" என்ற பொருள் வெளிப்படையாகத் தோன்றும். அத னுள் மறைந்துள்ள பொருளோ வேறானது. கோதையார், "நீ என்னைக் கட்டியணைப்பதைப் பார்ப்பவர்கள் என்ன சொல்வார் களோ?" என்றுதான் கண்ணனிடம் கேட்கிறாரே தவிர அவன் தன்னைச் சேர்த்தணைத்துக் கொள்வதில் தனக் குள்ள விருப்பு வெறுப்பினை வெளிப் படுத்தவில்லை. அவருக்கு கண்ண னுடனான சேர்க்கை கற்கண்டினும் இனிப்பதுதான். ஆனால் அது பாரோர் அறிய நிகழலாமோ? பெண் மையின் நாணம் அதற்கு இடந்தர வில்லை. எனவேதான் காண்பார் களின் பேச்சுக்கு அஞ்சும் தமது அச் சத்தை வெளியிடுகின்றார்.

அடுத்ததாக கோதையார் நீராடப் போனபோது தமதாடைகளைக் கவர்ந்துக் கொணடு கண்ணன் ஆடிய திருவிளையாடலைக் கூறுகின்றார்.

கண்ணன் தம்மோடு ஆடுகின்றான்; பாடுகின்றான்; அரவணைக்கின் றான்; ஆயினும் திடீரென மறைந்து போகின்றான். இவ்வாறின்றி எப் போதும் அவனது திருவடி நிழற்கண் தங்கியுறையும் பாக்கியம் தமக்குக் கிட்டுமோவென்று ஏங்குகின்றார் கோதையார். அவருடைய ஏக்கத் தினைக் கூடலிழைத்தலின் மூலம் வெளிப்படுத்துகின்றார். அத்தோடு நின்றாரில்லர். குயிலை நோக்கி,

"...உன் காதலியோடுடன் வாழ்குயிலே!
என் கருமாணிக்கம் வரக்கூவாய்"

என்று கெஞ்சிக் கேட்டுக் கொள் கிறார். அன்புடையாரைப் பிரிவுறு நோயை குயிலானது நன்கறியும். எனவே, கண்ணனைக் காணாது தவிக் கும் கோதையார் மனம் மகிழும் வண்ணம் அக்கார்முகில் வண்ணன் வரக்கூவுவது குயிலின் கடமையாகின் றது.

தீராத பிரிவுத் துயர் நெஞ்சைச் சுடத் துயிலச் சென்ற கோதையார் கனவில் ஆழ்கின்றார். அவரைப் பொறுத்தவரை,

" நனவினால் நல்கா தவரைக்
கனவினால்
காணடலின் உண்டென் உயிர்"

என்ற திருக்குறள் உண்மைப் பொரு ளாகின்றது. தன்னெஞ்சம் கவர்ந் தவன் தம் கரம் பற்றி மணம் முடிப் பதாகக் கனவு காண்கின்றார். தாம் கண்ட கனவை துயில் நீங்கி எழுந்த பின்பும் தம் தோழியிடம் சொல்லிச் சொல்லி மகிழ்கின்றார் கோதையார்.

" மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த
பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்து
என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன்
தோழீ! நான"

அதன்பின் கோதையாரின் மனம் கோபாலனையே சுற்றிச் சுற்றி வரு கின்றது. அவன் கையிலுள்ள சங்கு அவர் கவனத்தை ஈர்க்கின்றது. அச் செல்வப் பெருஞ்சங்கு செய்துள்ள புண்ணியம் எத்துணைப் பெரிது? பதினாறாயிரம் தேவிமார் பார்த் திருப்ப மாதவனின் வாயமுதம் உண் கின்றது பாஞ்ச சன்னியம். அதனி டமே மாதவனின் வாய்ச்சுவையும், நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின றார் கோதையார்:

" கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ
நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் திததித்
திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்
சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன சொல்
லாழி வெண்சங்கே!"

என்ற பாடலைப் பாடுங்கால் நாமும் கூட, 'சங்கிற்கு வாய்த்த பெரும்

பேறென்னே' என்று வலம்புரிச் சங்கின்மீது பொறாமை கொள்கிறோமல்லவா! ஆனால் கோதையாரிடம் பொறாமையில்லை. நினைந்தும், கேட்டறிந்தும் மாதவனின் மகிமையில் ஆழ்ந்து மகிழும் காதல் மனமே உள்ளது.

முன்பு குயிலைத் தூது விட்டவர் இப்போது மேகத்தை செங்கண் மாலிடத்தில் தூதுவிட்டுப் பார்க்கின்றார்; திருமாலிருஞ்சோலை அழகரை வழிப்பட்டு தம் துயர் தீர்க்க வேண்டுகின்றார்; கார்கோடற் பூக்களை விளித்து நெஞ்சு பொறுக்காது அழுது அரற்றுகின்றார்.

இத்தனைக்கும் பிறகு திருவரங்கன் தமக்கிழைத்த கொடுமையைத் தாயரிடம் கூறி வருந்துகின்றார்.

"எழிலுடைய அம்மனைமீர்! என்ன
ரங்கத் தின்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர்
கொப்பூழில்
எழுகமலப் பூவழகர் எம்மானார்
என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்
வளையே யாக்கினரே"

என்று 'தமது கரத்திலிட்ட வளை தானே கழன்று விழும் வண்ணம் தம்மை மெலியச் செய்தவன அக்கண்ணன்' என்று குறைகூறுமிடத்தே கூட அவரால் அவனின் பெருமைகளை வாயார புகழ்ந்து கூறாமல் இருக்க முடியவில்லை. காதல் வயப்பட்டாரின் தன்மை இதுதானே!!

அழுது புரண்டு அரற்றினும், தூது விட்டுப் பார்க்கினும், குறையிரந்து நிற்பினும் அவன் வருவதாகக் காணோம். எனவே தானே அவனை நாடிச் செல்ல வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வருகின்றார் கோதையார். தாமே தனி வழிசெல்வதிலும் உலகளந்த மாயன் உறையும் ஆய்ப்பாடிக்குத் தம்மைத் தம் சுற்றத்தார் கொண்டு சேர்ப்பின் நலமாயிருக்குமென்று வேண்டுகின்றார். அவனைச் சென்று சேருமவரையிலும் அவர் தம் பிரிவுத் துயரை ஆற்றியிருக்க வேண்டுமே; அவ்விதம் ஆற்றியிருத்தல் கண்ணனின் பீதக வண்ண ஆடை, நீலார் தண்ணந் துழாய், அவன் மார்பில் அணிந்த வனமாலை, ஆராவமுத மனையான் தன் அமுத வாயிலூறிய நீர், அவன் ஊதும் குழலின் தொளைவாய் நீர் ஆகியனவற்றைக் கொணர்ந்து தம்மீது சார்த்தினாலே முடியும் என்று கூறுகின்றார். ஆயினும் தம்மைப் பற்றி எரியும் அழல் கோவர்த்தனனின் தோளோடு தம் கொங்கைகள் கூடினாலன்றித் குளிராதெனத் தெளிவுபடுத்துகின்றார்.

இறுதியாக பிருந்தாவனத்தில் கண்ணனைக் கண்டு மகிழ்ந்தமையைக் கூறுவதோடு நாச்சியார் திருமொழி நிறைவெய்துகிறது. நாச்சியார் திருமொழி கோதையாரின் சுயசரிதையின் ஒரு கூறாகவே இலங்குகின்றது. அவரும் தாம் கொண்ட கொள்கைப் படியே திருவரங்கற்கே வாழ்க்கைப் பட்டு என்றும் திருமாலடியார் அவனோடு தம்மையும் சேர்த்து வைத்து வணங்கும் பெரும்பேறு உடையவரானார்.

நாச்சியார் திருமொழி, கோதையாரின் காதல் நெஞ்சம் பிரிவுத்துயர் தீர வேண்டிப் பாடிய பாடல்களின் தொகுதியாகும். அதன்கண் நம்மை உருக்கும் பரந்தாமனைக் குறித்த பல விளிச் சொற்றொடர்கள் ஆங்காங்கே மிளிர்கின்றன. அவற்றைத் தொகுத்துக் காணுங்கால் நம் நெஞ்ச வயலில் பக்திப் பயிர் வளர்வதற்கான உரம் தானே வந்து வாய்க்கும்படி உள்ளன.

நாச்சியார் திருமொழி நல்ல தமிழால் ஆனது. நாளும் பரந்தாமன் பக்தர் தொகை வளர்ப்பது. பாடுவார் அனைவரையும் பரந்தாமன் திருவடிக்கீழ் சேர்ப்பது. நாமும் அதனை அனுதினமும் பாடிப் பரவி திருமகள் கேள்வனின் திருவருளுக்காட்படுவோமாக.

"பருந்தாட் களிற்றுக் கருள்செய்த
பரமன் தன்னை பாரின்மேல்
விருந்தா வனத்தே கண்டமை விட்டு
சித்தன் கோதைசொல்
மருந்தா மென்று தம்மனத்தே
வைத்துக்கொண்டு வாழ்வார்கள்
பெருந்தா ளுடைய பிரானடிக்கீழ்ப்
பிரியா தென்றும்இருப்பாரே."



## இல்லாளுக்கு ஓர் இரும்புத்திரை!

பகவான் வாமானவதார காலத்தில் மாமன்னன் மகாபலியின யாகசாலைக்கு யாசகம் பெற்றிடச்சென்றான் அல்லவா? அப்போது அவன் தனது மார்பகத்திலுள்ள ஸ்ரீ மகாலக்ஷ்மியை கிருஷ்ணாஜினம் (இரும்புத்திரை போன்ற மான் தோல) கொண்டு மூடி மறைத்துக் கொண்டானாம். தான் தாங்கியுள்ள பிரமமச்சரிய வேஷத்துக்கு இசைவாக அவன் இவ்விதம் செய்தான் என்றுதான் கவிஞர்கள் பாடியிருக்கிறார்கள். ஆனால் காரணம் அது மட்டுமல்ல. பகவான அவ்விதம் திரையிட்டு மறைத்திராவிடில் தேவி மகாலக்ஷ்மியின் திவ்விய கடாக்ஷம் மகாபலி மன்னன்மீது பரிபூரணமாய் விழுந்து இருக்கும். அப்புறம் மகாபலியின பெருஞ்செல்வத்தைப் பறித்திடும் பகவானின் ரகஸ்ய திட்டம் என்னாகும்? அச்செல்வம் மேலும் ஓங்கி வளருமே தவிர, மங்கி மறைந்துவிடாதே! எனவேதான் வாமனன் தேவியை முன் ஜாக்கிரதையுடன் மூடி மறைத்துக் கொண்டானாம்! அரசாணிப்பாலை வேங்கடாத்வரி என்னும் கவிஞர் கூறும் அந்தரங்கம் இது!

—ஆர். சுப்பாராவ்-திருக்கோவலூர்.

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

அலவழக் கொன்றுமில்லா
அணிகோட்டியா
கோன அபிமான துங்கன்
செல்வனைப் போலத் திருமாலே
நானுஙககுப் பழவடியேன
நல்வகையால் நமோ நாராயணா
வெனறு
நாமம் பலபரவி
பல்வகையாலும் பவித்திரனே
உனைப்
பல்லாண்டு கூறுவனே'

செல்வத்தைக் கோரி "அன்டாதி பதயே நம, அணடாதிபதயே நம" 'அசுர சத்ரவே நம: அசுர சத்ரவே நம: என்பன போன்றவற்றை மீண டும் மீணடும் சொல்லி உருப்போட் டிருக்கும் அதிகாரிகளை நோக்கிப் பெரியாழ்வார் அச்செயல் தகாதென் றும் பயன மீது உள்ள இச்சையை விட்டு எம்பெருமானது ஆயிரம் நாமங்களையும் ஸ்மரித்து அவரைப் போன்றாருள்ள கோஷ்டியிலே சேரும் படி விளிக்கிறார். உண்ணுதற்கும் உடுத்தற்கும், அணிதற்கும் உள்ள சிறநத சாதனங்களையும், செல்வத் தையும் இவர்கள் விரும்பிய அளவிற் குக கொடுத்து உபகரித்து வந்த எம் பெருமான் இனியும் அவ்வித பயன் களைக் கோராமல் அவருடைய மங் களாசாசனத்தில் ஈடுபட்டவர்களாய் மாறிடபடியால் அவர்கள் சுத்த சாத் வீகர்களாகிய நிலையை 8-ஆம் பாசு ரம தெரிவிக்கிறது.

பழைய தீவினையினால் ஏற் பட்ட அகங்காரம் நீங்கியபடியால் எல்லா ஆத்மாக்களும் எம்பெருமா னுடைய அடிமை நிலையில் நிற்கின் றன. எனவே கேவலம் செல்வத் தையே விரும்பி எம்பெருமானை ஆராதித்து வந்த ஆத்மாக்கள் இப் பொழுது திருத்தம் பெற்றவர்களாய் மாறியபடியால், தேகமே ஆத்மா வென நினைததல், ஆத்மா ஸ்வதந் தரம் என்று நினைத்தல், பலன்களின் மேலுள்ள இச்சையினால் இறைவ னைப் பூஜித்தல் என்பன போன்ற குற்றங்கள் நீங்கி தலைசிறந்த திருக் கோட்டியூர் செல்வ நம்பியையைப் போல எம்பெருமானுக்குப் பழமை யான தாஸத்துவம் பூணடுவிட்ட மையை 11வது சூத்திரம் கூறுகிறது.

ஏற்கனவே சொல்லியபடி 12ஆம் சூத்திரம் திருப்பல்லாண்டு பதிகத்தை ஓதுவதால் உண்டாகும் பலனைக் கூறுகிறது.

முதல் பாசுரம் ஒரு பல்லவியைப் போல ஒவ்வொரு பாசுரத்தோடும் சேர்த்துப் பாடத் தகுதி பெறறது.

இத்திருப்பல்லாண்டு பதிகத்தால் இறைவழிபாட்டிற்குரிய மேற் சொன்ன மூவகை அதிகாரிகளையும் மங்களாசாசனத்தில் ஈடுபடுத்திய பெருமை பெரியாழ்வாரைச் சார்ந் தது என்பது வெளிப்படை.



## பக்தர்கள் மூவகை

கீதையில் பகவான், பகதர்கள மூன்று வகை உண்டென்று சொல்லியிருக்கிறார்.

1. சாமக பகதன் (பயனை விரும்பி பக்தி செய்வோன்).
2. நிஷ்காமனாயினும் ஒரு சார்பான பக்தன்.
3. ஞானி அலலது சம்பூர்ண பக்தன்.

சாமக பக்தன் மனதில் சில விருப்பங்களைத் தாங்கியபடியே பக வானை அணுகுவோன் என்பது பொருள். இந்த பக்தி கீழ்த்தரமானது என்று கூற வேண்டாம். புகழ்கிட்டுமென்ற ஆசையினால் ஒருவர் சேவை செய்தால் குற்றம் என்ன? அவர்களுக்கு மதிப்பளியுங்கள். பயனைக் கரு தும் சாமகனாயிருந்த போதிலும் ஆணடவனிடம் போய் அழுவோன் சாதாரணமானவன் அல்ல. உலகில் முன் கையை ஏந்தாது கடவுளை வேண்டுவதற்குள்ள பெருமையைக் குறைத்துக் கூறுவதற்கில்லை. காரணம் எதுவாயிருந்த போதிலும் நீ பக்தியுடன் கோவிலினுள் புகுவாய். ஆரம்பத்தில் ஏதோ பயனைக் கருதிப் போனபோதிலும் பின்னர் நீ பயன்களைக் கருதாத நிஷ்காமன் ஆகிவிடுவாய்.

நாட்டுப்புற மக்களின் பக்தி பாவனைக்குப் பெரு மதிப்புண்டு. இறுதியில் அதிலிருந்து பேராற்றல் உதிக்கும். மனிதன் எத்தகையவனா யிருந்த போதிலும் ஆணடவன் சந்நிதிக்கு ஒரு முறை வந்து விட்டால் அவன் மதிப்பிறகுரியவனாகி விடுகிறான். தீயில் எந்த மரத்தை இட்டா லும் அது பற்றிக் கொண்டு எரியும். ஆண்டவனிடம் பக்தி என்பது ஓர் அபூர்வ சாதனை. பயனை விரும்பிய பக்திக்கும் ஆண்டவன் மதிப்பளிப் பான். பிற்காலத்தில் அந்த பக்தியே பயன் கருதாததாகிப் பூரணத்தை நோக்கிச் செல்லும்.

பயனைக் கருதாதவர் பக்தர்களில ஒருசார்பினர். அவர்கள் இறை வனின் கருணையை வேணடுவோர்; அவா பாத தூளியை வேண்டுவோர்; அதை அடையும் ஆவலும் துடிப்பும் உள்ளோா. அதே போல் உலகின் நன்மையை விரும்புவோர்.

இப்பொழுது பூரண பக்தன் என்ற வகை எஞ்சி நிற்கிறது. இவனை ஞானி என்பர் இவனுக்குக் கண்ணுக்குத் தெரிபவை அனைத் தும் ஆண்டவன் உருவங்களாகவே காணும். எல்லாவற்றிலும் இவன் பரமனின் புனித உருவைத் தரிசிப்பான். ஞானியான இந்த பக்தன் இவ்வாறு செய்து கொண்டே ஒரு நாள் கடவுளிடமே இரண்டறக் கலந்து விடுகிறான்!

—வினோபாவின் 'கீதைப் பேருரைகள்'

தொகுத்தனுப்பியவர்: கமலா மாரியப்பன்-கோவை.

# வைஷ்ணவ கணபதி

திரு. பி. கே. ஸ்ரீனிவாசன்,
சென்னை.



இடையூறுகளை நீக்குபவர் கணபதி. விக்னேசர், விநாயகர், கணேசர் என்று பல பெயர்களைக் கொண்ட மாதிரியே உருவங்களும் பல உள்ளன. வல்லப கணபதி, சக்தி கணபதி, ரக்த கணபதி, ச்வேத கணபதி, மஹா கணபதி, வாதாபி கணபதி, உச்சிஷ்ட கணபதி, நர்த்தன கணபதி, பஞ்ச மாதங்கமுக கணபதி, மூலாதார கணபதி. போன்ற பலபல ரூபங்கள் விநாயகருக்கு இருப்பது அனைவரும் அறிந்ததே. இப்படிப்பட்ட பல உருவங்களில் 'வைஷ்ணவ விக்நேசர்' எனும் மூர்த்தியும் ஒரு ஆபூர்வமான படிமமாகும் சில பழமையான வைணவ ஆலயங்களில் இவ்வடிவத்தைப் பாாத்துவிட்டு, 'பிள்ளையாருக்கு நாமததைப் போட்டுவிட்டு வைணவர்கள் இவரைத் தும்பிக்கையாழ்வார்' என்று கூறி வழிபடுகிறார்கள் என்று ஏளனமாகவோ அல்லது வேறு வித்தியாசமாகவோ சொல்வதுண்டு. ஆனால்,இது சரியானதன்று. வைணவ ஆகமங்களில் கூறியபடியே தாலா இவ்வுருவம அமைக்கப்பட்டுள்ளது.

விஷ்வக்ஸேன ஸம்ஹிதையில் பதினொன்றாம்அத்தியாயத்தில் முக்ஙிய பரிவார தேவதைகளின் சில்ப சம்பந்தமான அளவுகள், நிறம், ஆயுத விந்யாஸங்கள் முதலியன கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதில் வைணவ விக்னேசரும் ஒருவராவர். அதில் இவரைப் பறறிப் பின் வருமாறு விவரிக்கப் பட்டிருக்கினறது.

**உத்பத்தி :**

இவர் ஸ்ரீமந் நாராயணனுடைய அம்சம். துஷடர்களை அழிப்பதற்காக யாகாக்னியிலிருந்து ஆவிர்பாவமானவர். இருபத்தைந்து தத்வங்களில் நான்காவதான ஆகாச தத்வமாக விளங்குபவர். எல்லா விக்னங்களையும் போக்கடிப்பதனால் விக்னேசர் எனும் பெயா பூண்டவர்.

" நாராயணாமசகம் ஸாக்ஷாத்
ஆகாசாத்மகம் அவ்யயம் |
ஹஸ்திவக்த்ர ஸமாயுக்தம்
லீலயாக்நௌ ஸமுத்பவம் ||
துஷ்ட ப்ரதவம் ஸனார்த்தாய......"

இவ்விக்னேசருக்கும் நாராயணனுக்கும் பேதம் கிடையாது என்பது பத்தாவது அத்யாயத்தில் உறுதியிடப் படுகிறது.

" யோSஸௌ நாராயண: ஸாக்ஷாத்
ஸ ஹி விக்னேசோ உச்யதே|
யோSஸௌ விக்னேச: இத்யுக்த:
ஸ ஹி நாராயண: ஸம்ருத ||"

படிம உருவம் :

இவர் யானை முகத்துடன் கூடியவர், ஸகல ஆபரணங்களையும் அணிந்து எல்லா அவயங்களுடன் இரண்டு அல்லது மூன்று கண்களுடன் விளங்குபவர். ஸர்ப்பத்தைப் பூணூலாகக் கொண்டு வெண்மையான பட்டு வஸ்திரம் தரித்துக்கொண்டு நான்கு கைகளை உடையவர். வலப்புறமேல் கரத்தில் சக்கரத்தையும், இடப்புறமேல் கரத்தில் சங்கத்தையும் ஏநதியிருப்பவர். கீழ் வலக்கரம் அபய ஹஸ்தமாகவும் கீழ் இடக்கரத்தில் படத்திலுள்ளதுபோல் கதையைப் பிடித்துக்கொண்டு விஷ்ணுவைப்போல் காக்ஷியளிப்பவர். சிரசில் கரண்ட மகுடம் அணிந்து பத்ம பீடத்தில் நின்ற கோலத்தில் இருப்பவர். இவர் நாராயணாம்சம் என்பதை உறுதிப்படுத்த பீடத்தின் அடிப்பாகத்தில் உட்கார்ந்த நிலையில் கருடன் உண்டு.

" ஆகுஸ் தத் வாஹனம் ப்ரோக்தம்
கருடம் வாக்ரத: ஸ்மரேத்|
நாராயணாம் சகத்வாத் ப்ரோக்தஸ்
தத்ர ககேச்வர:||

சக்கரமும் சங்கும் ஏந்தி, இடது கீழ்க்கையில் கதைக்குப் பதிலாக அங்குசத்தையோ அல்லது பாசத்தையோ (கயிறு) தரிப்பதாக மூர்த்தியின் உருவத்தை அமைக்கலாம்.

படிமத்தில் மற்றும் ஒரு வகையுணடு. மேல் வலப்புறக் கரங்களில் பரசுவையும், அங்குசத்தையும், கீழ் வலக்கரத்தில் அக்ஷ மாலையுடன் அபய ஹஸ்தத்தையும், கீழ் இடக்கரத்தில் பாசத்தையும் தரிப்பவராகவும் அமைக்கலாம்.

இவருடைய வாகனம் மூஞ்சூறு. தும்பிக்கையின் நுனியில் ஒரு பழத்தை வைத்திருப்பது போலவும் படிமம் சமைக்கலாம். 'ஓம கணபதயே விக்னநாயகாய நம: ஓம்' என்பது இவருடைய மூலமந்த்ரம். இவரை வழிபடுவதால் எல்லா இஷ்டங்களும் கைகூடுவதுடன் இடையூறுகள் இன்னல்கள் எல்லாம் விலகிவிடும்.

' விக்னேசம் வைஷ்ணவம் வக்ஷ்யே
ஸர்வ விக்னௌப நாசனம் |
......விக்னேசம் யோSர்சயேத் த்விஜ:|
ஸர்வான் காமான் அவாப்னோதி... ||"

நம் கஷ்டங்கள் விலக நாமும் இந்த வைஷ்ணவ விக்னேசரை வணங்கிப் பயன் அடைவோம்.

★

---

(8-ம் பக்கம் தொடர்ச்சி)

நெஞ்சமும் (அதன் செயலான) எண்ணமும் ஒரு நிலை நில்லாது தடுமாறக் கண் கொட்டாது திகைத்து நின்றார். (இப்பேர்ப்பட்ட பேரொளி படைத்த மாளிகையை கண்டிராமையால் கலங்கினர்).

பரதன் அம்மாடத்தின் வரலாறு கூறுதலை" அடுத்த செய்யுள் நம் " இலிங்க பூசை" கட்டுரைக்கு உயிர் நிலையான செய்யுளாகும். அதனைக காண்போம்.

விண்டுவின் மார்பிற் காந்து மணியென
விளங்கு மாடம்
கண்டனர் பரதன் றன்னை வினவினர
வர்க்குக் காதற்
புண்டரீகத்து வைகும் புராதன
கன்னற் றோளான்
கொண்ட நற்றவந் தன்னாலே
யுவந்து முன் கொடுத்ததென்றான்

(திருமாலுடைய திருமார்பிலே சொலிக்கின்ற கௌத்துப மணியைப் போல் விளங்குகின்ற (அந்த) மாடத்தை கண்டனராய் பரதனை நோக்கி (அதன் வரலாற்றை) வினவின விபீஷணாதியர்க்கு (அந்தப் பரதன்) தாமரை மலரில் வாழ்பவனாகிய பிரமதேவன், அகன்ற அழகிய தோளையுடைய இட்சுவாகு பூண்ட சிறந்த தவத்தினாலே உவந்து அன்போடு முன் கொடுததகாகும இது என்று (அதன் வரலாறு) கூறினான்).

இவ்வரலாறு பாத்ம புராணத்திலும் ஆதரிக்கப்பட்டுள்ளது நோக்கத் தக்கது.

ஆக முதலில் பாலகாணடத்தில் குலமுறை கிளத்துப்படலத்தில் விஸ்வாமித்திரர் மூலம் இராமனுடைய குல தெய்வம் திருவரங்கனே என விவரித்த கம்பன் இறுதியில் யுத்தகாண்டத்தில், மீட்சிப்படலத்தில் பரதன் மூலமாக விபீஷணன் முதலானவர்க்கு திருவரங்கனின் கோயிலை சுற்றிக் காட்டுவதாகக் கம்பன் கூறுவதால் இலிங்க பூசை காட்சி கம்பனுக்கு முற்றும் விரோதமானது என தெள்ளிதின் விளங்கும். அடுத்த கட்டுரையில் மகாகவி காளிதாசஸனின் நோக்கில் இராமனின் குல தெய்வத்தை அறிவோமாக.

" சிலையினால் இலங்கை செற்ற
தேவனே தேவனாவான் "



# இராமானுஜரால் நியமிக்கப்பட்ட எழுபத்து நான்கு ஸிம்ஹாஸனாதிபதியர்

1. ஆளவந்தார் ( மாரா கொடடை நம்பி அவர் குமாரர் என்னாச்சான் அவா குமாரர் பிள்ளையப்பன்.
2. பெரிய நம்பி குமாரர் புண்டரீகர்.
3. திருக்கோட்டியூர் நம்பி குமாரர் தெற்காழ்வான்.
4. திருமலையாண்டா ,மாரர் சுந்தரத் தோளுடையார்.
5. பெரிய திருமலை நம்பி குமாரர் கந்தாடை ஆண்டான்.
6. கூரத்தாழ்வான் குமாரர் பட்டர் சீராமப் பிள்ளை.
7. முதலியாண்டான் குமாரர் கந்தாடையாண்டான்.
8. நடுவில் ஆழ்வான.
9. கோமடத்தாழ்வான்.
10. திருக்கோவலூராழ்வான்.
11. திருமோகூராழ்வான்.
12. பிள்ளைப்பிள்ளையாழ்வான்.
13. நடாதூராழ்வான்.
14. எங்களாழ்வான்.
15. அநந்தாழ்வான்.
16. மிளகாழ்வான்.
17. நெய்யுண்டாழ்வான்.
18. சேட்டலூர்ச் சிறியாழ்வான்.
19. வேதாந்தியாழ்வான்.
20. கோயி ஆழ்வான்.
21. உக்கலாழ்வான.
22. அரணபுரத்தாழ்வான.
23. எம்பார்.
24. மடாபியாச்சான்.
25. கணியனூர் சிறியாச்சான்.
26. ஈச்சம்பாடியாச்சான்.
27. கொங்கிலாச்சான்.
28. ஈச்சம்பாடி ஜீயர்.
29. திருமலை நல்லான்.
30. சட்டம் பிள்ளை ஜீயர்.
31. திருவெள்ளரை ஜீயர்.
32. ஆட்கொண்ட வில்லி ஜீயர்.
33. திருநகரிப் பிள்ளை.
34. காரஞ்சி ஸோமயா ஜீயர்.
35. அலங்கார வேங்கடவர்.
36. நம்பி கருந்தேவர்.
37. சிறுப்புள்ளி தேவராஜ பட்டர்.
38. பிள்ளையுரைந்தையுடையார்.
39. திருக்குருகைப்பிரான் பிள்ளான்.
40. பெரிய கோயில் வள்ளலார்.
41. ஆசூரிப் பெருமாள்.
42. திருக்கண்ணபுரத்தாச்சான்.
43. முனிப்பெருமாள்.
44. அம்மங்கிப் பெருமாள்.
45. மாருதியாண்டான்.
46. மாறொருன்றில்லா மாருதியாண்டான்.
47. ஸோமாஜியாண்டான்.
48. ஜீயராண்டான்.
49. ஈஸ்வராண்டான்.
50. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான்.
51. பெரியாண்டான்.
52. சிறியாண்டான்.
53. குறிஞ்சிபுரம் சிறியாண்டான்.
54. அம்மங்கியாண்டான்.
55. ஆளவந்தாராண்டான்.
56. அருளாளப் பெருமாள் எம்பெருமானார்.
57. தொண்டனூர் நம்பி.
58. மருதூர் நம்பி.
59. மழுவூர் நமபி.
60. திருக்குறுங்குடி நம்பி.
61. குரவ நம்பி.
62. முடும்பை நம்பி.
63. வடுக நம்பி.
64. வங்கிபுரத்து நம்பி.
65. ஸ்ரீபராங்குச நம்பி.
66. அம்மங்கியம்மாள்.
67. பருத்திக் கொல்லையம்மாள்.
68. ககலம்மாள்.
69. சொட்டையம்மாள்.
70. முடும்பையம்மாள்.
71. கொமாண்டூர் பிள்ளை.
72. கொண்டூர் இளையவல்லி.
73. கிடாம்பிப் பெருமாள்.
74. ஆற்காட்டுப் பிள்ளான்.

அனுப்பியவர்: தி. வி. பார்த்தசாரதி.

(28-ம் பக்கத் தொடர்ச்சி)

அன்று பாலகனாகி ஆலிலைமேல்
துயின்ற எம்மாதியாய்
என்றும் உன்றனக் கெங்கள்மேல்
இரக்கமெழாத தெம்பாவமே
(திருமொழி)

**நாரணன் விளையாட்டு**

தென்புதுவைப் பட்டர்பிரான் விட்டு சித்தர் கோதை சொன்ன திருமொழிகள் பக்திநெறியை எளிமைப் படுத்திப் பாமரரும் இறையருள் பெற்றுய்யுமாறு செய்வன. ஒன்றேயாகி நின்ற இறைவன், பரமான்மா, சீவான்மா என இரண்டாகி, பலவாகி மாயத்தோற்றம் செய்து, தம்மிலிருந்து அனைத்தையும் ஆக்கி, தம் அதிகாரத்துட்படுத்தி ஆளுகின்றான். வேறுபட்டுக்காணப்படும் அவற்றைச் சற்றே நிலைநிறுத்தி, உருவ வேறுபாடு செய்தல் எனும் நீக்கலைச் செய்கிறான். இத்தகைய அலகிலா விளையாட்டு அவனது உலகியல் எனும் இந்த விளையாட்டின் முழுக் கருத்தாவும் பரமனே என உணர்வோருக்கு அவன் ஒருவனே உள்பொருள் என்பது புலனாகிறது. மாயை வழி நின்றபோது அவன் தத்துவன் ஆகத் தெரிகிறான். அதாவது, அது (தத்= பரமான்மா அல்லது உலகம், உடல்) என்றும் நீ (த்துவன் = சீவான்மா/ உயிர்) என்றும் வேறுபட்டுக் காட்சி தருகிறான். சுவரில் தீட்டப்பெற்ற பலவகை உருவங்களும் கண்ணுக்குப் பலவாகித் தெரிதலைப் போன்றது இது. அடிப்படை உண்மையை உணர்ந்த நிலையில் காண்பன எல்லாம் ஒரு பொருளின் மாயத்தோற்றமே எனும் ஒருமையுணர்வு அமைகிறது. இந்நிலையில் அப்பரம் பொருள் தத்துவமிலான் ஆகிறான். சுவரைக் கையால் தடவும்போது உருவங்கள் தட்டுப்படாமல் சுவரொன்றே (அடிப்படையே) தட்டுப்படுவதைப் போன்றது இது. வேறுபடுதலும் ஒன்றாதலும் இறைவனின் அலகிலா விளையாட்டு.

நாராயணனின் இந்த விளையாட்டை உணர்ந்தவர்க்கு அவன் எளியனாகிறான். தன்னையொத்த மனிதனாகிறான். சிறுவனாகிறான் அன்பனாகிக் காதலனாகிறான். அவனோடு மனம்விட்டுப் பேசத் தோன்றுகிறது. உரிமையோடு ஏசத் தோன்றுகிறது. கெஞ்சவும் தோன்றுகிறது. இத்தகைய பரம இரகசியம் நாச்சியாரின் மறைமொழிகளில் உள்ளுறையாகக் கிடக்கிறது.

**அருளமுதம்**

நாச்சியார், 'இறைவன் எட்டுதற்கு அரியவன்' என்று எண்ணும் மாந்தருக்கு அவன்எளியவன் எனக்காட்டுகிறார். அவரது மொழிகள் இறையருளைப்பெறுதற்கு அருளப்பெற்றவை. இறையருள் பெற்றார் இறவாமை எனும் வீட்டு நெறியை எய்துவர். இதனால் அணிபுதுவைக் கோதை கோத்தளித்த கன்னித்தமிழ்ப் பாமாலைக் கண்ணியும் பூவிதழும் அமுதமாகதிகழ்கின்றன. இந்த அரிய அருளமுதம் இலக்கியச் சுவையை உலகியலிலும், பக்தி — ஞானச் சுவையை ஆன்மவியலிலும் அருளுகின்றது. ★

## ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில், பிரம்மோத்ஸவம், திருமலை.

| தேதி | நாட்கள் | காலை உத்ஸவம் | மாலை உத்ஸவம் |
|---|---|---|---|
| 21–9–90 | வெள்ளி | —— | அங்குரார்ப்பணம் சேனாதிபதி உத்ஸவம் |
| 22–9–90 | சனி | துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாகனம் |
| 23–9–90 | ஞாயிறு | சிறிய சேஷவாகனம் | ஹம்ஸவாகனம் |
| 24–9–90 | திங்கள் | சிம்ஹ வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 25–9–90 | செவ்வாய் | கல்பவிருக்ஷ வாகனம் | ஸர்வ பூபால வாகனம் |
| 26–9–90 | புதன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாகனம் |
| 27–9–90 | வியாழன் | அனுமந்தவாகனம் (மாலை வசந்தோத்ஸவம்) | கஜ வாகனம் |
| 28–9–90 | வெள்ளி | சூரியப் பிரபை | சந்திரப்பிரபை |
| 29–9–90 | சனி | திருத்தேர் | ஹஸ்வ வாகனம் |
| 30–9–90 | ஞாயிறு | தீர்த்தவாரி அவப்பிரதோத்ஸவம் | துவஜாவரோஹணம் |

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு
அரியவன்
நிலவு உலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து
ஆடுவான்
மலர்சி லம்புஅடி வாழ்த்தி
வணங்குவாம் !
—பெரிய புராணம்

உலகம் அனைத்தும் இறைவன் அருட்கருணையாலேயே இயங்குகின்றன. "அவனன்றி ஓர் அணுவும் அசையாது!" என்பது பழமொழி. உலகங்களின் இயக்கமும, அவ்வுலகங்களில் வாழும் உயிர்களின் வாழ்வும், வாழும் உயிர்களுக்குத் துணை புரியும் உயிரற்ற பொருள்களின் வளப்பமும் இறைவனால் அருளப்பட்டவையே!

இறைவன் இவற்றையெல்லாம் அருளுவானேன்! உயிர்கள்பால் அவனுக்குள்ள பெருங்கருணையால்என்க. இதனாலேயே இறைவனைக் 'கருணாகரக் கடவுள்' என்கிறோம். 'அருட்பெருஞ்சோதி! தனிப்பெருங் கருணை!' எனப்படும் வள்ளலார் வாக்கையும் நோக்குக.

# உலகெலாம்

திரு. மாருதிதாஸன்,
காஞ்சிபுரம்

கருணைக் கடலான கடவுளுக்கு வடிவம் ஒன்று உண்டா? எனின், உண்டென்பார் சிலர், இல்லையென்பாரும் உளர்.

ஆண்டவன் உருவமாகவும இருக்கிறான்; அருவமாகவும் இருக்கிறான் என்பதே தத்துவம.

சைவப் பெருநூலாய் விளங்குவது திருத்தொண்டர் புராணம் எனப்படும் பெரிய புராணம். சைவமும் தமிழும் தழைத்தோங்கவும். உலகமக்களின் அக இருளாம் அறியாமையைப் போக்கவும் ஒரு பெரும் புலவராய் உலகினில் ஒளிரும் சேக்கிழார் பெருமான் இப்பெருநூலை உலகிற்கு உபகரித்தருளினார்கள். தெய்வ மணங்கமழும் சைவப் பெருநூலாம் பெரிய புராணத்தின் காப்புச்செய்யுள் உமையம்மை காண உளம் உவந்தாடும் நடராசப்பெருமானைக் குறித்து நிற்பது!

'உலகெலாம்' என்று இறைவனால் எடுத்துக் கொடுக்கப்பட்ட தொடக்கத்தினைக் கொண்டு திகழ்வது இக்காப்புச் செய்யுள். தில்லையில் திருநடஞ் செய்யும் கூத்தப்பெருமானைச் சேக்கிழார் பெருமான் வாழ்த்தி வணங்கும் இத்தெய்வத் திருப்பாடலில் இறைவனின் திருவுருவ நிலைகள் நுட்பமாகச் சுட்டப்பட்டுள்ளன என்பதைச் சைவச் சான்றோர் சிறப்பாக எடுத்துக்காட்டுவர். இதுகுறித்துச் சிறிது நோக்குவம்.

இறைவனின் திருவடியைச் சாரும் முத்தி நெறிகள் நான்கு என்று சைவ சித்தாந்தம் சாற்றும். அத்திருநெறிகள் சரியை, கிரியை,யோகம், ஞானம் எனப்படும். 'இப்பெருநெறிகள் அவரவர் தகுதிக்கேற்பவும், மனப் பக்குவத்திற்கொப்பவும் நான்காகச் சுட்டப்பட்டுள்ளன. இந்நான்கு நெறியினருக்கும் ஏற்ற வண்ணம் நடராசப்பெருமான் தில்லையில் திருநடனம் புரிகிறான் என்பதைக் காப்புச் செய்யுள் எழிலுறச் சித்தரிக்கிறது.

உள்ளத்தால் உணர்தலுக்கும் வாயினால் ஓதலுக்கும் அரியவனாக ஆண்டவன் விளங்குகிறான். அப்படியாயின், அவனை அறிதல்தான் எப்படி? அவன் திருவருளையே கண்ணாகக் கொண்டு கண்டால் அவனைக் கண்டு அறிதல் இயலும். 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்பார் மணிவாசகப் பெருமான். எனவே, அவன் திருவருள் கூட்டுவித்தால் மட்டுமே அவனை அறிதல் முடியும் என்பது பெறப்படுகிறது.

இறைவன் திருவருளைப் பெறுதல் யாங்ஙனம்? ஞானம் கைவரப்பெற்றவர்க்கு இறைவன் திருவருள் தானே வந்து எய்தும். உணர்தலுக்கும் ஓதலுக்கும் அரியவனாக உள்ள இறைவன் ஞானம் கைவரப் பெற்றார்க்கு எளியனாக வந்து காட்சி தருகிறான்.

ஞானமென்பது, உணர்தலாலே அகத்தொழிலையும் ஓதலாலே புறத்தொழிலையும் கைவிட்டுக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல் எனப்படும் அறிவுத் தொழில் மாத்திரையால் வழிபடுவது. இதன் பயன் சாயுச்சிய முத்தி பெறுதலாம்.

இதில் 'உலகெலாம்' என்பது சடப் பொருள்களாகிய உலகங்களைக் குறிக்காது. ஏனெனின் உலகங்கட்கு உணர்தல் அறிவும், ஓதல் அறிவும் இல்லையாதலின். அவ்வாறாயின், 'உலகெலாம்' என்பது எதனைக் குறிக்க எழுந்ததோ வெனின், அறிவுடை உலகத்தைக் குறிக்கவே எழுந்ததென்க.

உணர்தல் என்பது பசு ஞானம். ஓதல் என்பது பாச ஞானம். பசு ஞானத்தாலும், பாச ஞானத்தாலும் காண்பதற்கரியவன் இறைவன். சிவ ஞானம் ஒன்றாலேயே அவன் உண்மை நிலையைக் காணல் முடியும் என்பது புலனாகிறது. பசுஞானம் என்பது ஆன்ம அறிவு, பாச ஞானம் என்பது தநு, கரண, புவன, போக, பாக்கியங்களால் பெறப்படும் அறிவு.

பசு ஞானமும், பாச ஞானமும் நீங்கப் பெற்றுச் சிவஞானம் பெற்றவரே இறைவனின் சொரூபத்தை—அகண்டாகார வடிவைக் காணுதல் முடியும் என்பதனை அறிய முடிகிறது. இதனால், ஞான நெறியின் மூலம் இறைவனைக் காணலாம் என்னும் உபாயம் உணர்த்தப்பட்டது.



ஞானநெறி நின்று இறைவனின் திருவடி இன்பத்தைத் துய்த்தவர் மணிவாசகர். ஞானநெறி எனினும் நன்னெறி எனினும் ஒக்கும்.

'நிலவுலாவிய நீர்மலி வேணியன்' என்பது இரண்டாம் அடி. 'நிலவு என்பது, இங்கு மூன்றாம் பிறையைக் குறிக்கும். தக்கன் சாபத்தால் தேயும் நிலையடைந்த சந்திரன் சிவபெருமானைச் சரணடைந்தான். மூன்றாம் பிறைச் சந்திரனைத் தன் முடிமீது சூடி அபயம் அளித்தார் ஆண்டவன்!

நீர் என்பது கங்கையைக் குறிக்கும். பகீரதன் தவத்துக்கிரங்கித் தன் சடாமுடியில் கங்கையைத் தாங்கினான் சிவபெருமான் என்பது வரலாறு.

வேணியன் என்பதற்குச் சடைமுடியை உடையவன் என்பது பொருள்.

தன் திருச்சடை முடியில் நிலவினையும் கங்கையினையும் தாங்கிக் காட்சி அளிப்பவன் இறைவன் என்பதை இரண்டாமடி எழிலுறக் காட்டுகிறது.

தன்னைச் சரணடைந்த சந்திரனுக்கு வாழ்வையும் உயர்வையும் அளித்த செயல் இறைவனின் அநுக்கிரகத்தைக் காட்டுகிறது. இறைவனின் அறக்கருணைக்கு இது சிறந்த எடுத்துக்காட்டு.

ஆர்ப்பரித்து வந்த ஆகாய கங்கையின் ஆற்றலை அடக்கித் தன் திருமுடியில் தாங்கிய வரலாறு அவன் நிக்ரகத்தை — மறக் கருணையைக் காட்டுகிறது.

ஆர்ப்பரித்து வந்த கங்கையை ஆண்டவன் அழிக்கவில்லை. அடக்கி அருள் புரிந்தார். எனவே, ஆணவம் கொண்ட உயிர்களை ஆண்டவன் என்றும் அழிப்பதில்லை என்பதை உணரலாம். வினையை மட்டுமே நீக்கி அருள்பாலிப்பான் என்பது இதனால் பெறப்படுகிறது.

நிலவு என்பது கலை ஞானத்தைச் சுட்டிநிற்கும். ஆறாதாரங் கடந்து ஏழாம் ஆதாரமாகிய சந்திரமண்டலத்தை அடைந்து நிற்கும் யோகிகட்கு அருளும் திருமேனி 'நிலவுலாவிய நீர்மலி வேணியன்' என்னும் தொடரால் உணர்த்தப்படுகிறது.

யோகிகளின் கண்களுக்கு மட்டுமே புலனாகும் இறைவனின் அருவத் திருமேனி-நிஷ்களத்திருமேனி இத்தொடரால் குறிக்கப்படுகிறது. யோக நெறியால் காணுதற்கு உரியவனாக இருக்கும் இறைவனின் இயல்பு இதனால் உணர்த்தப்படுகிறது.

அதிசூக்கும வடிவமே இறைவன் திருவுரு. ஏனைய சகள நிஷ்களங்கள் அவரை வழிபடுதற்கு அமைந்த திருமேனிகள் என்றுணர்ந்து அகத்தொழில்மாத்திரையால் வழிபடுவது. இதன் பயன் சாரூபமுத்தி.

யோக நெறியால் இறைவனின் திருவடி இன்பத்தைத் துய்த்தவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

'அலகில் சோதியன்' என்பது அடுத்த தொடர். அளவற்ற ஒளி வடிவினன் என்பது இதன் பொருள். 'ஒளிவளர் விளக்கே' எனவும் 'அருட்பெருஞ் சோதி' எனவும் 'ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ் சோதி' எனவும் வரும் தொடர்களை நோக்குக.

சோதி என்பதற்கு ஒளி என்பது பொருள். அளவற்ற ஒளி வடிவினனாக இருக்கும் இறைவனின் இயல்பு இதனால் பேசப்படுகிறது. ஒளி எனினும் சோதி எனினும் ஒன்றே! ஆண்டவன் அளவற்ற சக்தியை உடையவனாக இருக்கின்றான் என்பதையே 'அலகில் சோதியன்' என்னும் தொடர் குறித்து நிற்கிறது. இதனால், இறைவனின் அருவுருவத் திருமேனி—நிஷ்கள சகளத்திருமேனி—சுட்டப்படுகிறது.

## சந்தாதாரர்களுக்கு...

30-9-90—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர் களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித் துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப் பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

45 46 370 379 807 819 1842 1955 1962 1996 2011 3133 3181 3190 3225 3226 3245 3318 3321 3326 3336 3341 3344 3346 3348 3349 3350 3352 3377 3388 3395 3733 3971 4361 4445 4448 4458 4461 4463 5571 6014 முதல் 6017 6019 முதல் 6023 6025 முதல் 6032 6034 முதல் 6050 6055 முதல் 6059 6061 முதல் 6069 6199 6468 6471

'அலகில் சோதியன்' என்னும் தொடர் கிரியை நெறியால் காண்பதற்குரியவன் இறைவன் என் பதைக் குறிப்பாக உணர்த்தி நிற் கிறது.

இறைவனது சூக்கும வடிவமே பொருள். தூல வடிவமானது. அதனை வழிபடற்கிடமாகிய திரு மேனி என்றுணர்ந்து அகமார்க்கத் தானும் புறமார்க்கத்தானும் பூசிப் பது.

கிரியை நெறியால் எய்தும் பயன் சாமீப முத்தியாம். கிரியை நெறியை விளக்கி அருளியவர் சம்பந்தமூர்த்தி சுவாமிகள். 'அம்பலத்தாடுவான்' என்பது அடுத்த தொடர். அம்பலம் என்பது திருச்சிற்றம்பலத்தைக் குறிக் கும். பொன்னம்பலத்தில் இறை வன் திருநடம் புரிகிறான். 'ஆதியும் அந்தமுமில்லா அற்புதத் திருக்கூத் தினை மாதொரு பாகம் நோக்கி மன்னு சிற்றம்பலத்தே' இறைவன் ஆடி அருள்கிறான்.

திருநடம்புரியும் நடராசப்பெருமா னின் திருமேனியை உமையம்மை மட் டுமா காண்கிறார்! உலக மக்களா கிய நாமுமன்றோ காண்கிறோம். எனவே, நடராசப் பெருமானின் உரு வத்திருமேனி—சகளத்திருமேனி இத னால் உணர்த்தப்படுகிறது. அம்ப லத்தாடும் நம்பெருமானை நாமும் பூக்களாலும் பாக்களாலும் அர்ச் சனை செய்து வழிபட்டு உய்வு பெற லாமன்றோ!

எனவே, இதனால் சரியை நெறி உணர்த்தப்படுகிறது.

தூலவடிவு மாத்திரையே பொருள் என்று உணர்ந்து காயமாத்திரை யால் வழிபடுவது சரியை எனப்படும்.

சரியை நெறியால் எய்தும் பயன் சாலோக முத்தியாம். சரியை நெறி யில் நின்று அருள் பெற்றவர் திரு நாவுக்கரசு சுவாமிகள்.

இனி, இவற்றைத் தொகுத்துக் காண்போம்.

உணர்தலும் ஓதலும் அற்ற நிலை யில் ஞானத்தால் மட்டுமே இறைவ னின் அகண்டாகார வடிவை வழிபடு வது ஞானநெறி அல்லது நன்னெறி எனப்படும்.

அகத்தொழில் மாத்திரையானே அருவத்திருமேனியை—நிஷ்களத்திரு மேனியை வழிபடுதல் யோகநெறி அல்லது தோழமை நெறி எனப்படும்.

புறத்தொழில், அகத்தொழில் ஆகிய இரண்டினாலும் அருவுருவத் திருமேனியை—நிஷ்கள சகளத்திரு மேனியை வழிபடுதல் கிரியை நெறி அல்லது மகன்மை நெறி எனப்படும்.

புறத்தொழில் மாத்திரையானே உருவத்திருமேனியை சகளத்திரு மேனியை நோக்கிச் செய்யும் வழி பாடு சரியை நெறி அல்லது தொண் டர் நெறி எனப்படும்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும் நால்வகை நெறியிலும் நிற்பவர்கள் காணுமாறு திருநடம் புரிபவன் நடராசப்பெருமான். அவன் திருவடி மலர் போலும் மென் மையுடையது. நடம்புரியும் அவன் திருவடியில் சிலம்பு ஒலிக்கிறது. சிலம்பொலிக்கும் அவன் மலரடியி லிருந்தே உலகங்கள் யாவும் மலர்கின் றன. எனவே, உலகங்கள் யாவும் மலர்வதற்குக் காரணமாக உள்ளது நடராசப் பெருமானின் திருவடியே என்பது புலனாகிறது.

இத்தகைய சிறப்புமிக்க திரு வடியை வாயினால் பாடி வாழ்த்து வோம்; மனத்தினால் சிந்தித்து வணங்குவோம் என்று பெரிய புரா ணக் காப்புச் செய்யுள் முடிகின்றது.

அம்பலத்தாடுவான் மலர் சிலம் படியை நாமும் வாழ்த்தி வணங்கு வோமானால், நம்மையும் அவன் காப் பான் என்பது உறுதி.

வாழ்க உலகெலாம்!



(4-ஆம் பக்கத் தொடர்ச்சி)

தி.தி.தேவஸ்தான ஊழியர்களுக்கு வீடு கட்டிக்கொள்ளுவதற்கு உதவிடும் வகையில் தி. தி. தேவஸ்தான ஊழியர் வங்கிக்கு 1990-91 ஆண்டுக்காக ரூ. 50 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ ஃ

## வரவு-செலவு

1990-91ஆம் நிதியாண்டில் தி.தி. தேவஸ்தானத்தின் வருவாய் ரூ. 101.52 கோடியாகவும் செலவு ரூ. 100.79 கோடியாகவும் இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. வருவாய்தொகை என்பது உண்டி மூலமாக ரூ.29.52 கோடியும் ஆர்ஜித சேவைகளின் மூலமாக ரூ. 7.72 கோடியும் பிரஸாதங்களின் விற்பனை மூலமாக ரூ. 10.61 கோடியும், தரிசனத்திற்கான சிறப்பு நுழைவு டிக்கெட் விற்பனை மூலம் ரூ. 6.72 கோடியும், வங்கி இருப்புநிதிக்கான வட்டித்தொகை மூலம் ரூ. 27.02 கோடியும் அடங்கும். செலவு என்பது குடில்கள்,சத்திரங்கள், மருத்துவமனைகள் ஆகியயற்றைக் கட்டுவதற்காக ரூ. 22.21 கோடியும் கோயில் பிரஸாதங்கள், ஆர்ஜித நிகழ்ச்சிகளுக்காக ரூ. 14.5 கோடியும் அடங்கும். மேலும் நிர்வாகச் செலவினங்களுக்காக ரூ.10.95 கோடியும், ஊழியர்கள் சம்பளத்திற்கென ரூ. 14.59 கோடியும் கல்விநிறுவனங்களின் நிருவாகத்திறகென ரூ. 6.60 கோடியும், அன்னதான திட்டம், மற்றும் ஊழியர்களுக்கும் கடன்வழங்க ரூ.15.21 கோடியும இச்செலவுபட்டியலில் அடங்கும்.

ஃ ஃ ஃ ஃ

## தி. தி. தேவஸ்தான பதவி மாற்றங்கள்

திரு. என். தர்மராஜுலு அவர்கள் திருமலைக் கோவில் பெயிஷ்காராக நியமிக்கப்பட்டுள்ளார்.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

திரு. பட்டாபி ரெட்டி அவர்கள் திருச்சானூர் கோயில் பெயிஷ்காராக நியமிக்கப்பட்டுள்ளார்.

திரு. பி. ராமச்சந்திரய்யா அவர்கள் திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில் பெயிஷ்காராக நியமிக்கப்பட்டுள்ளார்.

ஃ ஃ ஃ ஃ

## பரிசளிப்பு விழா

5-2-1989 அன்று தி. தி. தேவஸ்தானம் நடத்திய 10-வது இதிஹாஸ புராண கல்வித் தேர்வில் தேர்ச்சி மாணவ மாணவிகளுக்கு 5-7-90 அன்று ஸ்ரீ அன்னமாச்சார்யார் கலா மந்திரத்தில் நடைபெற்ற சிறப்பு நிகழ்ச்சியில் பரிசுகள் வழங்கப்பட்டன. இத்தேர்வில் 9500 மாணவ மாணவிகள் பங்கு கொள்ள, 7500 நபர்கள் தேர்ச்சி பெற்றனர். தேர்ச்சி பெற்ற மாணவ மாணவிகளுககு ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. எம். ரவீந்திரநாத் சௌதரி அவர்கள் பரிசுகள் வழங்கினார். இவ்விழாவிற்கு ஆந்திர மாநில அரசு முதன்மை இணை இயககுநர் திரு. பீமராஜு அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்க, தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி. எஸ். பிரஸாத் அவர்கள் தலைமை வகித்தார். அமைச்சரவர்கள் தம் வாழ்த்துரையில் இந்து தர்மத்தின் மேன்மையினையும், அதனை பரப்ப வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்தினார். பின்னர் செயலாட்சித் தலைவர் தம் தலைமை உரையில் இத்தேர்வுத் திட்டம் அடுத்து வரும் ஆண்டுகளில் கர்னாடகத்திலும், தமிழகத்திலும் விரிவு படுத்த மேலாண்மை எண்ணி வருவதாகக் குறிப்பிட்டார்.

ஃ ஃ ஃ ஃ

## வாசகர்களுக்கு . . .

ஜூலை ஸப்தகிரி இதழின் 'அன்னமய்ய ஜயந்தி விழா' சிறப்பு கட்டுரை வெளியிடப்பட்ட பக்கம் 24-ல் ஸ்ரீ அன்னமாச்சாரியார் திருவுருவத்திற்குப் பதிலாக மற்றொரு புகைப்படம் பிரசுரிக்கப்பட்டு விட்டது. மேலும் அந்த இதழில் பக்கம் 40-இல் வெளியிடப்பட்ட புகைப்படத்திற்கான விவரங்கள் பிரசுரிக்கப்படவில்லை. திருவிரிஞ்சிபுரத்திலுள்ள சிம்மக்குளத்தின் முகப்புத் தோற்றமான இப் புகைப்படத்தினை சென்னையைச் சார்ந்த திருமதி.ஜலஜாசக்திதாஸன்அவர்கள் எமக்கு அனுப்பி வைத்தனர். ஏற்பட்ட தவறுகளுக்கு மன்னிக்க வேண்டுகிறோம்.

—ஆசிரியர்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

